# ஞானசம்பந்தம்

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 38 ] காளயுக்தி ஆண்டு கார்த்திகைத்திங்கள் 10—12—78 [ இதழ் 1

இராஜாஜி நூற்றுண்டு விழா நினைவு மலர் :

சென்னை தருமபுர ஆதீன சமயப்பிரசார நிலையத்

திறப்பு விழாவில்.



ஸ்ரீ லஸ்ரீ கயிலைக்குருமணி அவர்கள் இராஜாஜி அவர்களுக்கு

ஆதீன வெளியீடாகிய முதல்திருமுறையை வழங்குதல்.

28 - 9 - 1953

தருமையாதீனக் குருமுதல்வர்



ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள்

உ

குருபாதம்

## ஸ்ரீ குருஞானசம்பந்தர் அருள்வாக்கு

—★—

அடியார் பரிபாகம்
  எல்லாம் அறிந்து
படிகீழ்ப் பதமேற்
  பதத்திற் — கொடுபோய்
இருத்திடுவை சேர
  இனுமேலாம் போகம்
அருத் திடுவை சொக்கநா தா.

— சொக்கநாத வெண்பா-47

ஆசிரியர் :-

வித்துவான்

**இராமலிங்கத் தம்பிரான் சுவாமிகள்**

துணையாசிரியர் :-

மகாவித்துவான்

**சி. அருணைவடிவேல் முதலியார்**

உ

குருபாதம்

# “ஞானசம்பந்தம்”

தருமையாதீனத் திங்கள் இதழ்

மலர் 38 | 10-12-78 | இதழ் 1

## உட்பொருள்

உ

சிவமயம்

## தருமையாதீனம்

## "ஞானசம்பந்தம்" திங்கள் இதழ்

## சந்தாதாரர்களுக்கு

# ஓர் அறிவிப்பு

—(★)—

தருமையாதீனத்திலிருந்து திங்கள்தோறும் மலர்ந்து செந்தமிழ் மணமும் சிவமணமும் பரப்பி, சிவஞானத் தேன் நிறைந்து, கற்போர் கருத்தைக் கவர்ந்துவரும் "ஞானசம்பந்தம்" முப்பத்தேழு ஆண்டுகள் நிறைந்து முப்பத்தெட்டாவது ஆண்டின் முதலிதழ் வெளிவருகிறது.

சந்தாதாரர்கள் தனி அறிவிப்பை எதிர்பாராமல் மீண்டும் தொடர்ந்து ஆண்டுக் கட்டணம் செலுத்தியும், புதிய சந்தாதாரர்களாகச் சேரவிரும்புவோர் கீழ்க்காணும் முகவரிக்கு ஆண்டுக் கட்டணம் அனுப்பியும் "ஞான சம்பந்தம்" இதழைப் பெற்றுக் கற்றுப் பயனுறுவார்களாக.

வேலை மிகுதியினுலோ அல்லது மறதியினுலோ ஆண்டுச் சந்தா செலுத்துவதில் தடை ஏற்படலாம். தடையில்லாமல் "ஞானசம்பந்தம்" பெற வாய்ப்பு அளிக்கும் முறையில் ஆயுள் சந்தா ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. ஆயுள் சந்தா அறிவிப்புச்செய்தது முதல் இன்றுவரை அறுநூறு அன்பர்களுக்கு மேலாக ஆயுள் சந்தா செலுத்திப் பலர் ஆயுள் உறுப்பினராகி உள்ளனர்.

ஆயுள் சந்தா செலுத்தினல் அவர்களது வாரிசுகளும் "ஞானசம்பந்தம்" பெற வசதி செய்து தரப்படும். மேலும் தமது ஆயுள் சந்தாவை மற்றவர்களுக்கோ, கல்வி அறநிறுவனங்களுக்கோ மாற்றிக்கொடுக்க விரும்பினுல் அதற்குரிய ஏற்பாடுகளும் செய்துதரப்படும்.

இவ்வரிய வாய்ப்பைப் பயன்படுத்தி ஆயுள் சந்தா தாரர்களாகச் சேர்ந்து "ஞானசம்பந்தம்" பெற்றுப் பயனடையுமாறு கேட்டுக்கொள்கிறோம். இன்றே உங்களை ஆயுள் உறுப்பினராக்கிக்கொள்ளுங்கள்.

## சந்தா விபரம்

| | | | |
|---|---|---|---|
| **ஆண்டுச் சந்தா** (உள்நாடு) | ... | ரூ. | **9—00** |
| **ஆண்டுச் சந்தா** (சிலோன்) | ... | ரூ. | **11—00** |
| **ஆண்டுச் சந்தா** (வெளிநாடு) | ... | ரூ. | **17—00** |
| **ஆயுள் சந்தா** (உள்நாடு) | ... | ரூ. | **100—00** |
| **ஆயுள் சந்தா** (வெளிநாடு) | ... | ரூ. | **125—00** |

அஞ்சற் செலவின் அதிகம் காரணமாகவும், அச்சுத் தாளின் விலை கூடுதல்காரணமாகவும் சந்தாத்தொகையில் சிறிது மாற்றம் செய்யப்பட்டிருக்கிறது.

## விளம்பரம்

| | | |
|---|---|---|
| **பின் அட்டை வெளிப்பக்கம்** | **2-கலர்** | **250—00** |
| ,, **உட்பக்கம்** | **1-கலர்** | **150—00** |
| **உட்பக்கம் முழுப்பக்கம்** | ,, | **100—00** |
| ,, **அரைப்பக்கம்** | ,, | **50—00** |

கட்டணம் அனுப்பவேண்டிய மூகவரி:—

**செயலாளர்,**

ஞானசம்பந்தம் செயலகம்,
தருமபுரம், மாயூரம் 609 001
தஞ்சை மாவட்டம்.

உ
குருபாதம்

# ஞானசம்பந்தம்

மலர் 38 | காளயுக்தி - கார்த்திகை - 10—12—78. | இதழ் 1

திருச்சிற்றம்பலம்

பொன்தயங் கிலங்கொளிந் நலங்குளிர்ந்த புன்சடை
பின்தயங்க ஆடுவாய்! பிஞ்ஞகா! பிறப்பிலீ!
கொன்றையம் முடியிஞய்! கூடலால வாயிலாய்!
நின்றயங்கி யாடலே நினைப்பதே நியமமே. —சம்பந்தர்

திருச்சிற்றம்பலம்

## நூற்றுண்டும் - கால் நூற்றுண்டும்

**இராஜாஜியின் முத்திரை:**

ஒரு நாட்டின் பெருமை, அதன் புகழ், உலக அரங்கில் அது பெறும் இடம், இவற்றிற்கெல்லாம் அடிப்படை அதில் பிறந்து வாழ்ந்த சான்றோர்களின் சிறப்பேயாகும். பல்துறை அறிஞர்களை ஈன்று உலகுக்கு வழங்கிய தமிழகத்தின் புகழ்மிக்க வரலாற்று ஏட்டில் பொன்ஏடாகத் திகழ்பவர் அமரர் இராஜாஜி. கல்வி, கலை, கலாசாரம், அரசியல், ஆன்மீகம், சட்டம் என இப்படி எத்துணைத் துறைகள் உண்டோ, அங்கெல்லாம் இராஜாஜியின் நினைவும், பசுமையான முத்திரையும் பளிச்சிடக் காணலாம். ஒரு தலைசிறந்த அறிவுநூலின் இரண்டாம்பதிப்பைப் பார்வையிட்டு மகிழ்வதுபோல், இராஜாஜியின் பிறந்தநாள் நூற்றுண்டு விழாவில் தமிழகம் திளைத்திருக்கிறது. இந்திய விடுதலைப்போராட்டத்திலும், விடுதலைபெற்ற இந்திய நாட்டின் புதிய நிர்மாணப் பணிகளிலும் இராஜாஜி ஆற்றியிருக்கும் அரிய தொண்டுகள் தேசிய நீரோட்டத்தில் தமிழகத்திற்குப் பெருமிதம் அளிப்பன.

**பிரசாரநிலைய வெள்ளிவிழா :**

அரசியல் அரங்கில் வாழ்நாளின் பெரும் பகுதிகளைச் செல விட்டவர் இராஜாஜி. ஆனாலும், ஆன்மீகம் மற்றும் கலைத் துறை களில் அவருடைய நாட்டமும், தொண்டும் குறிக்கத்தக்க சிறப்புப் பெற்றே விளங்குகின்றன. சைவ - வைணவ சமயங்கள், இவற்றிற்கு வளம் சேர்த்த நல்லறிஞர்கள், இவற்றின் பெருமைமிக்க புகழ் நூல்கள் பற்றியெல்லாம் இராஜாஜியின் சிந்தனை ஆழமாக வேர்ஊன்றி நின்றன. அதனால் கிடைத்த அரிய நூல்களும், கட்டுரைகளும் சமய வாழ்வில் மக்களை ஈடுபடுத்தப் பெருந்துணையாயின என்பதை நாடு நன்கு அறியும். தொட்டதைத் துலங்கவைக்கும்திறமும், எடுத்ததை நிறைவேற்றும் துணிவும் கொண்டிலங்கிய இராஜாஜி அவர்களின் பிறந்தநாள் நூற்றாண்டைக் கொண்டாடும் அதே நேரத்தில், இவர்கள் திருக்கரத்தால் தொடங்கிவைக்கப்பெற்ற சென்னை தருமபுர ஆதீன சமயப்பிரசார நிலையத்தின் கால்நூற்றாண்டு வெள்ளிவிழாவும் இணை வது மிகவும் மகிழ்ச்சி தருவதாக அமைகின்றது.

**பல்துறைப் பணிகள் :**

சைவசமயம் - மற்றும் செந்தமிழ்வளர்ச்சியில் நானூறு ஆண்டுக் கால வரலாற்றுச் சிறப்புமிக்க பணியினை அடக்கமாகச் செய்துவந் திருக்கும் பெருமை தருமை ஆதீனத்திற்கு உண்டு. தருமை ஆதீனத்தின் பணியினைத் தமிழகத்தின் தலைநகரத்தில் மலர்விக்க வேண்டுமென்ற எண்ணத்தில் சென்னையில் பிரசார நிலையம் ஒன்று அமைக்கத் திட்டமிடப்பெற்றது. அப்போது சென்னைமாநில முதல் அமைச்சராகத் திகழ்ந்த இராஜாஜி அவர்களைக்கொண்டே இப்பிரசார நிலையத்தைத் திறப்பிக்கவேண்டுமென்று ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமகா சந்நிதானத்தில் திருவுளம்பற்றினார்கள். அவர்கள் திருவுள்ளப்படியே அமரர் இராஜாஜி அவர்களால் திறந்துவைக்கப்பெற்ற சென்னை தருமையாதீன சமயப் பிரசார நிலையம், பல்வேறு அருளறப் பணி களைச் செம்மையாக நிறைவித்த பெருமிதத்தில் வெள்ளிவிழாக் காணு கின்றது. தமிழ்–சமஸ்கிருதக்கல்வி, சித்தாந்தசாத்திர வகுப்புக்கள், சமய விரிவுரைகள், சமய விழாக்கள், திருமுறைப்பயிற்சி, முறையான திருக்கோயில் வழிபாட்டு நெறிமுறைகள், திருக்கோயில் திருப்பணிகள் போன்ற பல்வேறு நிலைகளில் சென்னை நிலையம் ஆற்றிவந்திருக்கும் பணிகளைத் தமிழுலகம் நன்கு அறியும்.

**தலைநகரில் பிரசார நிலையம் ஏன் ?**

இருபத்தைந்து ஆண்டுகளுக்குமுன்பு இந்நிலையத்தைத் திறந்து வைத்து இராஜாஜி அவர்கள் ஆற்றிய உரையின் சுருக்கம் வேறு ஒரு

பக்கத்தில் இவ்விதழில் அச்சிடப்பட்டுள்ளது. அன்று அவர்கள் ஆற்றிய உரையின் பகுதிகள் நம் நெஞ்சில் பசுமையாக நினைவு கூரத்தக்கனவாகும். தருமபுர ஆதீனத்தின் சார்பில் சென்னையில் தொடங்கப்பெற்ற பிரசார நிலயம் பற்றித் தமக்கே உரிய நுட்பத்தோடும் நகைச்சுவை உணர்ச்சியோடும் இராஜாஜி குறிப்பிடுகிறார் :-

"தருமபுர ஆதீனத் தலைவர்கள் தங்கள் சேவையைத் தமிழ்நாட்டின் தலைநகரமாகிய சென்னைப் பட்டினத்திற்கே கொண்டுவந்திருக்கிறார்கள். இது (சென்னை) தலைநகரந்தான். தலை என்றால் பேன் சேரும். அழுக்கு சேரும். அவற்றை ஒழிக்க ஏற்பாடுசெய்கிறார்கள். இது சரியே. கெட்டுப்போன ஊரைச் சீர்படுத்தத்தான் தருமபுரஆதீனத் தவர்கள் இம்முயற்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள். தலை சீர் பட்டால் உடலும் சீர்படும். தலைநகருக்கு வருவதால் ஆதீனம் பிரகாசிக்கும் என்று அவர்கள் இங்கு வரவில்லை. ஆதீனத் தலைநகரம் தருமபுரந்தான். ஆனாலும், தலையைச் சீர்படுத்த இங்கு இந்நிலயத்தை ஆரம்பித்திருக்கிறார்கள்."

எத்தனை நுட்பமான பார்வை! இராஜாஜியின் எண்ணம் பொய்யாக வில்லை. இன்று, தம் இருபத்தைந்து வருடப் பிரசாரத்தால் ஆயிரக் கணக்கானவர்களைச் சமயத்துறைக்கு ஈர்த்து, அவர்களைப் பக்தியும் பண்பாடும் உடையவர்களாக மாற்றியிருக்கும் பிரசார நிலயத்தின் தொண்டினை முன்னதாகவே எண்ணமிட்டுக் கூறிய இராஜாஜி அவர்களின் தீர்க்கதரிசனத்தினை வியக்காமல் இருக்க முடியவில்லை. தலை சீர்பட்டால் உடல் சீர்படும் என்ற அவர்கள் பார்வை எத்துணை உண்மையானது என்பதை இன்றும் சிந்தித்து மகிழமுடிகிறது.

**இராஜாஜி விடுத்த எச்சரிக்கை :**

தம் உரையில் இராஜாஜி அவர்கள் குறிப்பிடும் செய்தி ஒன்று இன்றைய நிலையில் மிகவும் அவசரமாகக் கவனிக்க வேண்டிய ஒன்றாகும். திருக்கோயில், திருமடங்கள் ஆகியவற்றின் நிலவருவாய்கள் பெரும்பாலும் முடக்கப்பட்டு, பூசைகளும், அறச்செயல்களும் செம்மைபெறநடக்க இயலாதிருக்கும் இன்றையநாளில் இராஜாஜியின் உரை எச்சரிக்கையாக அமைகிறது.

"தருமபுர ஆதீனத்தின் வேலைபற்றிப் புகழ்ந்து பேசப் பட்டது. அவர்கள் நல்ல சேவை செய்துவருகிறார்கள்"

என்று பாராட்டும் இராஜாஜி அவர்கள்,

" முந்தைய காலத்தில் அந்தந்தக்காலத்திற்கு ஏற்ப குறிப்பிட்ட வேலையைச்செய்ய: மடங்கள் ஏற்பட்டு வேலையைச் செய்துவந்தன. வேலைசெய்துகொண்டிருந்தால்தான் உயிர் என்பது இயற்கை நியதி. வேலைசெய்யாமற்போனல் உயிர் குன்றி மறைந்துவிடும் "

எனக்குறிப்பிட்டு, தருமநிலையங்களின் தோற்ற வளர்ச்சிகள் பற்றியும் அவற்றின் செயற்பாடுபற்றியும் விளக்குகிருர். மேலும் பேசுகையில்,

" ஆலயங்களில் பூஜைநடக்காவிடில் அது குட்டிச்சுவராகிவிடும். பின்னர் அந்நிய நாட்டார் ஸ்தம்பம் முதலியவற்றைச் சிற்பம் கலை இவைகளுக்காகப் பார்ப்பார்கள். சிற்பத்தினை எடுத்துக்காட்டுவதாக அது இருக்கும். பின்னர் முடிவில் அது மறைந்துவிடும். "

என உண்மை நிலையைப் படம் பிடித்துக்காட்டியுள்ளார். இராஜாஜியின் நூற்றுண்டு விழாவின்போது மக்களும், ஆட்சியாளர்களும் அவரது எச்சரிக்கையினை ஆழ்ந்து சிந்திக்கவேண்டுவது இன்றியமையாதது. ஒரு மகத்தான மனிதருக்குச் செய்யப்படும் மரியாதை அவரது கொள்கைகளையும் கோட்பாடுகளையும் மலரச் செய்வதை ஒட்டியதாகவே அமையமுடியும். இராஜாஜிக்கு விழா எடுக்கும் மத்திய மாநில அரசுகள் இதுபற்றிச் சிந்திக்க வேண்டுமென்று மக்கள் வேண்டுகோள் விடுப்பது இந்நேரத்தில் பொருத்தமானதே.

## விலைகொடுத்து வாங்குவதே தருமம்!

பன்னிரு திருமுறைகளையும், சாத்திர தோத்திரங்களையும் அரிய பேரிலக்கியங்களையும் அடக்க விலையில் வெளியிட்டு வருவது தருமையாதீனம். இதுவரை எழுநூற்றிருபத்தெட்டு நூல்கள் வெளிவந்துள்ளன. சமயம் வளர்க்கும் ஆதீனங்கள் இந்நூல்களை இலவசமாக வழங்கக் கூடாதா என்று கேட்போர் இன்றும் உண்டு. இப்படிப்பட்டவர்களுக்கு இராஜாஜி கூறும் அறிவுரை என்ன?

ஆதீனத்தில் புத்தகங்களுக்கு விலை சரசமாகப் போட்டிருக்கிருர்கள். விலை ஏன்? தருமபுர ஆதீனமாயிற்றே! தருமமாக விநியோகிக்கக் கூடாதா என்று கேட்கலாம். விலை இல்லை என்ருல் ஒரு சில பிரதிகளே அச்சிட்டு விநியோகிக்கமுடியும். ருசியான மாம்பழத்தைத்தின்கிருேம். கொட்டையைத் தூக்கி எறிந்துவிட்டால் மறுபடிபழந்தின்ன

முடியுமா? எங்காவது போட்டு வைத்திருந்தால் முளைத்திருக்கும். காலாந்தரத்தில் பழம் கொடுக்கும். தின்னலாம். அதுபோல விலை கொடுத்தால் கிடைப்பதைக்கொண்டு மேலும் அவர்கள் பிரதிகளை அச்சிட்டு இதரர்களுக்கும் தரமுடியும். ஆகவே, விலை கொடுத்து வாங்குவதைத் தருமமாகக் கொள்ளலாம்".

**சொல்லும் செயலும் :**

சென்னை தருமையாதீன சமயப்பிரசார நிலயத்தின் வெள்ளி விழாவை ஒட்டி, நூற்றுக்கணக்கானவர்கள் அமர்ந்து செவிமடுக்கத்தக்க பிரசாரமண்டபம் ஒன்றை நிர்மாணிக்க ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்கள் திருவுளப்பாங்கின் வண்ணம் ஏற்பாடாகி வருகிறது. சென்னைநகரினைச்சார்ந்த அன்பர்களும் பக்தர்களும் கொண்ட வெள்ளி விழாக் குழுவினர் இம்முயற்சியில் முனைப்போடு செயற்பட்டுவருகின்றனர். இன்று முயற்சி மேற்கொள்ளப்பெற்றிருக்கும் இப் பிரசார மண்டபம்பற்றி அன்றே இராஜாஜி அவர்கள் தம்விருப்பத்தினைத் தெரிவித்திருந்தார்கள். உண்மையான விருப்பங்கள் காலங்கடந்தாவது நிறைவேறியேதீரும் என்பதற்கு அவர்கள் பேசிய பேச்சே நல்ல சான்ருக அமைந்துள்ளது. அன்று பிரசாரநிலயத் திறப்புவிழாவில்,

"இந்த இடத்தை இப்படி அலங்கரித்திருக்கிருர்கள். நான்குநாளாளுல் இதெல்லாம் போய்விடுமே; இடம் திறந்தவெளியாகிவிடுமே என்று வருத்தம் ஏற்படுகிறது. இங்கு ஸ்திரமானமண்டபத்திற்கு ஏற்பாடுசெய்யவேண்டும். இப்போது எதற்கெல்லாமோ மண்டபம் கட்டுகிருர்கள். இந்த நல்லகாரியத்திற்கு மண்டபம் நிறுவுவது அவசியம், இது என் ஆசை. இங்கு மண்டபம் எழ எல்லோரும் ஒத்துழைக்கவேண்டும்."

எனத் தம் எண்ணத்தை வெளியிட்டதோடு தேவையற்ற காரியங்களுக்குச் செலவிடும் மக்கள் இத்தகு நற்காரியங்களுக்கு மனமுவந்து உதவவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டார். இராஜாஜி அவர்களின் இந்த எண்ணம் இதுபோது செயல்வடிவம்பெற இருப்பது மகிழ்ச்சிக்குரியது.

**மகிழ்ச்சிப் பிரார்த்தனை :**

இராஜாஜியின் நூற்ருண்டு விழாவும், சமயப் பிரசார நிலயத்தின் கால் நூற்ருண்டு வெள்ளி விழாவும் இணைந்து எழில் கூட்டும் இப்

பொன்னான நேரத்தில் "ஞானசம்பந்தம்" தனது முப்பத்தேழு ஆண்டு ஆன்மிக அறப்பணியை நிறைவுசெய்து முப்பத்தெட்டாவது ஆண்டு இறை இலக்கியப் பணியை மேற்கொள்வதில் பெருமிதம் அடைகிறது.

அமரர் இராஜாஜி இன்று இல்லை. ஆனால் பசுமரத்தாணிபோல் நெஞ்சில் பாயும் அவரது அறிவுரைகள் உள்ளன. அவர் பிறந்தநாள் நூற்றாண்டு விழாவில் அவரது உரையை நினைவுகூர்ந்து அவருக்கு அஞ்சலி செலுத்தும் அதே நேரத்தில், அவர்களால் தொடங்கி வைக்கப்பெற்ற சென்னை, தருமபுர ஆதீன சமயப்பிரசார நிலையத்தின் 25 ஆண்டுக்காலப் பணியையும் நினைவுகூர்ந்து, இந் நிலையத்தின் எதிர்காலப் பணிகளிலும் மக்கள் ஈடுபட்டு உயர இறையருளைப் பிரார்த்திப்போம்.

**வாழ்க இராஜாஜியின் நினைவு!**

**சூழ்க ஆன்மிக உணர்வு!**

---

# சமயச் சடங்குகள்பற்றி ரசிகமணி டி. கே. சி.

சைவ மடங்களிலாவது ஆனந்தம் கொடுக்கும் சடங்குகளைக் காப்பாற்றி வருகிறார்களே என்று டி. கே. சி. திருப்தியடைவார்கள். தருமபுரம் மடத்திலே தங்கியிருந்தபோது அவர்கள் எனக்கு எழுதிய கடிதம் :

"இரண்டுநாளாக, தருமைத் திருமடத்தில் தங்கியிருக்கின்றோம். மகாசந்நிதானம் நடத்துகின்ற பூஜையும், பக்தியும் வெகு ரம்யமானவை. சைவத்தின் அழகும் ஆனந்தமும் மனதுக்கு உகந்தவையாக உள்ளன. இத்தகைய சமுதாயப்பண்பாட்டை வேறுஎங்கும்காணமுடியாததுதான். இங்கே மூர்த்தி என்ன; தீபாராதனையின் அழகு என்ன; பாடல் என்ன; எல்லாம் கண்ணையும், மனதையும் கவர்ந்து வருகின்றன".

முன்னாள் உயர் நீதிமன்ற நீதிபதி,
இலக்கியரசிகமணி, **திரு. எஸ். மகராஜன் அவர்கள்**
சென்னை வானொலியில் பேசியது.

கேட்டு எழுதியவர் :- **இரா. செ.**

## அமரர் ஸ்ரீ இராஜாஜி அவர்கள்

**சென்னையில், தருமையாதீன சமயப் பிரசார நிலயத்தை**

**28—9—53 அன்று திறந்துவைத்து நிகழ்த்திய**

# தொடக்கப் பேருரை

பெரியவர்கள் இவ்வளவுபேர் கூடிய இந்த இடத்தில் எப்படிப் பேசுவது என்று தயங்கினேன். அதற்காகத்தான் ஸ்ரீ மீனாட்சிசுந்தரனாரை முதலில் பேசச்சொன்னால் என் கவலை குறையுமென நினைத்துப் பேசச்சொன்னேன். ஆனால், அவர்பேசியதால் என்கவலை அதிகரித்ததே ஒழியக் குறையவில்லை. நாமொன்று நினைக்க நடப்பது வேறு விதமாக இருக்கிறது.

மடங்கள்பற்றி, தனக்கு அதிக அனுபவம் கிடையாது என்றார் ஸ்ரீ மீனாட்சிசுந்தரனார். அவரைவிட எனக்கு அனுபவம் குறைவு. மடங்களுக்குப் போகவேண்டிய சமயம் வரும்போது எப்படியாவது தப்பித்துக்கொண்டிருக்கிறேன் நான். அம்மாதிரி ஒரு இடத்திற்குப் போனால், அந்த ஸ்தானத்திற்கேற்ப நடக்கவேண்டும். எனக்கு அளிக்கப்பட்ட பயிற்சியோ அதற்குத் தகுந்தவாறு இல்லை. என் தோற்றம் மனத்திற்கு வெறுப்புண்டாக்கும்தோற்றம். ஆகவே மடங்களுக்குப்போக எனக்குக் கூச்சம் ஏற்படுகிறது. நான் வைதிக குடும்பத்தில் பிறந்தவன்தான். ஆனால், இந்தக்காலத்திற்கேற்ப எனக்குப் பெரியவர்கள் பயிற்சி அளித்துவிட்டார்கள். அதனால் வைதிகமுறை தவறிப்போய்விட்டது. தவறிப்போன முறையைப் புதிதாக ஆரம்பித்தால் அது வேஷம் என்று சொல்வார்கள். ஆகவே என் பாட்டுக்கு வாழ்க்கையை நடத்திப்போகிறவன் நான். என் குடும்பத்தைச்சேர்ந்த மடங்களுக்கு என்னை வரச்சொல்வார்கள். நம்மைச்சேர்ந்த ஒருவன் இப்படி பதவிக்கு வந்திருக்கிறானே என்ற மகிழ்ச்சி அவர்களுக்கு. சந்நியாசியானாலும் இது விடுவதில்லை. கூப்பிடுவார்கள். கூச்சம் பயம் காரணமாகப் போகாமல் ஏமாற்றிக்கொண்டு வந்திருக்கிறேன். ஏதாவது ஒரு கூட்டம் கழகம் இவைகட்குப்போனால், அதற்குத் தடங்கலாக இருக்காமல் கலந்துநிற்கிறமாதிரி இருக்கவேண்டும். அப்படியானால்தான் போகவேண்டும்.

நமது ஸ்ரீ வேங்கடசாமி நாயுடு என்னைவிட தைரியசாலி. அவர்தான் என்னை இங்குவரும்படி வற்புறுத்தினார். அதனால், இப்பொழுது இந்த மடத்தில் நான் அகப்பட்டுக்கொண்டிருக்கின்றேன். பாடு என்றால் வழக்கமாகப் பாடுகிறமாதிரி எனக்குப் பாட்டு வரவில்லை. அதோடு என்னை எல்லோரும் புகழ்ந்துவிட்டதால் எனக்கு இருந்த ஸ்திரபுத்தியும் குழம்பிப்போயிருக்கிறது.

**மௌனம் ஏன்?**

எதற்காக என்னைப் புகழ்கிறுர்கள்? என்னைப்போல இத்துறையில் ஈடுபட்டிருந்தவர்கள் சொல்லாமல் மௌனமாக இருந்த விஷயத்தை நான் தைரியமாகச்சொன்னேன். தர்மம், கடவுள் இவைபற்றிப் பேசக் கூடாதென்று மௌனயோகம் மேற்கொண்டிருந்தபோது, நான் அது பற்றி மௌனம் ஏன் என்று பேசினேன். அதுபற்றிப்பேச எல்லோருக்கும் ஆசை. ஆனுல் அந்த ஆசையை அவர்கள் அடக்கிவைத்துக்கொண்டிருந்தார்கள். ஆசையை அடக்குவது கஷ்டமானதே. கட்டுப்பாட்டை மீறினேன். தர்மம், கடவுள் இவைபற்றிப் பேசினேன். இதரர் பேசாமலிருந்ததை நான் பேசியதால் மக்களுக்குச் சந்தோஷம். ஆதலால் என்னைப் புகழ்கிறுர்கள்.

**தர்மாமீட்டர் :**

இந்தப் புகழ் ஒரு ஊக்கம், தைரியம் அளிக்கின்றதே ஒழிய, இதனுல் வேறு பயன் கிடையாது. புகழ்வதைக்கண்டு ஏமாந்துவிடக் கூடாது என்பதை எடுத்துக்கூற விரும்புகிறேன். அது ஒரு நல்ல தர்மாமீட்டர் போலுள்ளது எனலாம். புகழ்வதில் பலனை எதிர்பார்த்துப் புகழ்கிறவர்கள் உண்டு. இவன் செய்வது நல்லகாரியம் என்று உண்மையில் உணர்ந்து சொல்லுகிறுர்களே அது நல்ல தர்மாமீட்டர் போன்றது. மற்ருெரு புகழ் தப்பு தர்மாமீட்டர்மாதிரி. தர்மாமீட்டர் ஜுரம் இருப்பதைக்காட்டும். அது மருந்தல்ல. அது மருந்தென்று முன்பு சிலர் நினைத்தார்கள். கண்ணுடிவைத்துக்கூட டாக்டர் பார்த்தார். ஜுரம் குறையவில்லையே என்று குறைபட்டார்கள். புகழ்வதைக்கண்டு ஏமாந்துவிடக்கூடாது என்பதற்காக இதைச்சொல்கிறேன். இதனுல் நன்மை ஏற்படாது. ஒருவேளை தீமைவேண்டுமானுலும் ஏற்படலாம். ஏற்படாது என்று நம்புவோமாக! புகழவேண்டாமென்ருல் அதை வேறு தப்பாக நினைத்துக்கொள்வார்கள்.

**தலை சீர்பட்டால் உடலும் சீர்படும் :**

தருமபுர ஆதீனத்தவர்கள் தங்கள் சேவையைத் தமிழ்நாட்டின் தலைநகராகிய சென்னைப்பட்டினத்திற்கே கொண்டுவந்திருக்கிறுர்கள். இது தலைநகரந்தான். தலை என்ருல் பேன்சேரும்; அழுக்குசேரும். அவற்றை ஒழிக்க ஏற்பாடுசெய்கிறுர்கள். இது சரியே. கெட்டுப் போன ஊரைச் சீர்படுத்தத்தான் தருமபுர ஆதீனத்தவர்கள் இம் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறுர்கள். தலைசீர்பட்டால் உடலும் சீர்படும். உடல் முழுவதும் சரிப்படுமென்று நம்பிக்கை. தலைநகரில் செய்யப் படுவதால் தமிழ்நாடு முழுவதும் பயனடையும். தலைநகருக்கு வருவதால் ஆதீனம் பிரகாசிக்கும் என்று அவர்கள் இங்கு வரவில்லை. ஆதீனத் தலைநகரம் தருமபுரம் தான். ஆனுலும் தலையைச் சீர்படுத்த இங்கு இந்த நிலையத்தை ஆரம்பித்திருக்கிறுர்கள்.

**சந்தேகம் இல்லை :**

தருமபுர ஆதீனத்தின் வேலைபற்றிப் புகழ்ந்து பேசப்பட்டது. அவர்கள் நல்ல சேவைசெய்து வருகிறார்கள். இதுபற்றிச் சந்தேகமே இல்லை. முந்தையகாலத்தில் அந்தந்த காலத்திற்கேற்ப குறிப்பிட்ட வேலையைச்செய்ய மடங்கள் ஏற்பட்டு வேலையைச் செய்துவந்தன. வேலைசெய்துகொண்டிருந்தால்தான் உயிர் என்பது இயற்கை நியதி ; வேலைசெய்யாமற்போனால் உயிர் குன்றி மறைந்துவிடும். ஆலயங்களில் பூஜை நடக்காவிடில் அது குட்டிச்சுவராகிவிடும். பின்னர், அந்நியநாட்டார் ஸ்தம்பம் முதலியனவற்றைச் சிற்பம் கலை இவைகளுக்காகப் பார்ப்பார்கள். சிற்பத்தினை எடுத்துக்காட்டுவதாக அது இருக்கும். பின்னர் முடிவில் அது மறைந்துவிடும்.

**என்னை நம்புங்கள் :**

அதேபோலத்தான் மடங்களும் முன்காலத்தில் ஒரு காரியத்திற்காக ஏற்பட்டன. மக்களுடைய மனத்தில் பக்தியைத் திரட்டித் தொண்டுசெய்தன. காரியம் குறைந்ததும் ஒரு வியாதி ஏற்பட்டுப் போகிறதுபோல் ஏற்பட்டுப்போகிறது. நிலையை உணர்ந்து மடம் என்ன காரியம் செய்யவேண்டும் என்பதை அறிந்து மடங்களுக்குப் புத்துயிர் அளிக்க ஏற்பாடுகள் செய்யப்படுகின்றன. ஆதீனத்தார் சாமர்த்தியமாக — தைரியமாக ஏற்பாடுகளை ஆரம்பித்திருக்கிறார்கள். சென்னைப்பட்டினத்தில் இது முக்கியமான நிகழ்ச்சி. இதைத் திருவிழாவாகக் கொண்டாடுவது சரியே. எவ்வளவு விரைவில் சிறப்பாகக் கட்டிடத்திற்கு ஏற்பாடுசெய்திருக்கிறார்கள். இந்த இடத்தை இப்படி அலங்கரித்திருக்கிறார்கள். நான்குநாளானால் இதெல்லாம் போய்விடுமே ; இடம் திறந்தவெளியாகிவிடுமே என்று வருத்தம் ஏற்படுகிறது. இங்கு ஸ்திரமான மண்டபத்திற்கு ஏற்பாடுசெய்யவேண்டும். இப்போது எதற்கெல்லாமோ மண்டபம் கட்டுகிறார்கள். இந்த நல்ல காரியத்திற்கு மண்டபம் நிறுவுவது அவசியம். இது என் ஆசை. இங்கு மண்டபம் எழ எல்லோரும் ஒத்துழைக்கவேண்டும். எதற்கெல்லாமோ லாட்டிரியில் பணம் போடுகிறீர்கள். இதனால் லாபம் உண்டு என்று இவன் சொல்லுகிறான் என்று நம்பலாம் என்றுவது என்னை நம்பி இந்தக்காரியத்திற்குப் பணம் போட்டுவைக்கும்படி, பணமிருப்பவர்களை நான் கேட்டுக்கொள்கிறேன்.

**பக்தியோடு நிற்கும்போது சர்ச்சை ஏது ?**

இந்த விழாவிற்குச் சங்கராச்சாரியார் வாழ்த்து அனுப்பியிருக்கிறார்கள். மடங்கள் எல்லாம் பக்தியை உண்டாக்குவனவே. பொதுவாக இதில் வித்தியாசமில்லை. அதைவிட்டு அதற்குமேலாக ஞான

மார்க்கம் என்று போகும்போதுதான் அபிப்பிராயபேதங்கள் எழுகின்றன. இந்தவழி நல்லதா? அந்தவழி நல்லதா? என்ற சர்ச்சை எழுந்துவிடுகிறது. பக்தியோடு நிற்கும்போது சர்ச்சை இல்லை. அதற்குமேலேபோய் அறியக்கூடாததை அறியவேண்டுமென்கிற துராசை ஏற்படும்போது ஆண்டவன் ஒரு சவுக்கடி போடுகின்றார். சர்ச்சை கிளம்பி பேதங்கள் ஏற்பட்டவுடன் மடங்களில் குடுமியைப் பிடித்துக்கொண்டு ஆடுகிறார்கள். எனக்குத் தெரிந்த பாஷையில் இப்படிப் பேசுவதற்கு மன்னிக்கவும். சண்டை ஏற்பட்டுப்போகிறது. எல்லாத்தர்மங்களும் எல்லாச்சமயங்களும் ஒன்றுக்கேவழிகாட்டுவன என்பதுதான் உண்மை. அதை மறந்து ஞானமார்க்கத்தில் அத்வைதமா? த்வைதமா? விசிஷ்டாத்வைதமா? என்ற சர்ச்சை எழுந்துவிடுகிறது. சைவம், வைஷ்ணவம் என்றால் நமக்குப் புரிகின்றது. அத்வைதம், த்வைதம் புரியாதது.

இப்படிச் சர்ச்சை எழும்போது இதற்கு மருந்துதரக் கடவுளே ஏற்பாடுசெய்கிறார். கடவுளே இல்லையென்று ஒரு சிலரைச் சொல்லக் கிளப்பி ஏற்பாடுசெய்கிறார். கடவுளை அறியும் வழிக்காகச் சண்டை போட்டுக் கஷ்டப்பட்டோம்; இப்போது கடவுளே இல்லை என்கிறார்களே சிலர் என்று எல்லோருக்கும் திகில் ஏற்பட்டுவிடுகிறது. கிறிஸ்தவர்கள் முஸ்லீம்கள் எல்லோருக்கும் கிலி ஏற்படுகின்றது. இது கடவுள் ஏற்பாடுதான். ஏனெனில் அவனன்றி எதுவும் நடக்காது. வித்யாசபாவனைகளை மறந்துவிட்டு மொத்தமாக எல்லோரும் ஒன்று சேருகிறார்கள். இது ஆண்டவனின்லீலை. இங்கு இஸ்லாமியர்களுக்கு இடமில்லை கிறிஸ்தவர்களுக்கும் இடமில்லை என்பதில்லை. எல்லோரும் ஒரே வேலையை — சமய வேலையைத்தான் செய்கிறார்கள். சங்கராச்சாரியார் மடத்துக்கும் தருமபுர மடத்திற்கும் வித்தியாசமுண்டு. இருவரும் சிவன் கோயிலுக்குப் போகிறார்கள் என்றாலும் மூலக் கொள்கை மாறுபட்டது. இன்று பொதுவாகச் சமயப்பணி என்ற முறையில் ஒன்றுசேர்கிறார்கள். சங்கராச்சாரியார் மடத்திலிருந்து வாழ்த்துச்செய்தி வந்திருக்கிறது.

**சூடுபட்ட பூனை :**

வைஷ்ணவ மடத்தினர்கள்தான் இன்னும் வரவில்லை. அவர்களுக்குப் பயம் அதிகம். ஆரம்பத்திலிருந்து கஷ்டப்பட்டவர்கள் அவர்கள். சூடுபட்ட பூனைபோல் பயப்படுகிறார்கள். 'எங்களுக்கா பயம்' என்று அவர்கள் கண்டிக்கலாம். பயமில்லை என்றால் வந்து சேருவதுதானே! ஸ்ரீ சங்கராச்சாரியாருக்கு ஆயிரம்கண். அன்றாடம் நடப்பதைப் பத்திரிகைபடித்தும் தெரிந்துகொள்கிறார்கள். அகோபில மடம், வானமாமலை மடம் முதலியனவற்றிற்தும் தெரியும்; ஆனால் கொஞ்சகாலம் பிடிக்கும்.

இந்த நிலையம் பக்தி மார்க்கத்திற்காக ஏற்பட்டுள்ள நிலையம். அறியக்கூடாத பொருளை அறியும் வீண் முயற்சி இல்லை இது.

**கடினபாஷையில் கருத்து உண்டு :**

ஒரு விஷயத்தைக் கஷ்டப்பட்டுத் தெரிந்துகொண்டால்தான் திருப்தி ஏற்படுகிறது. அதற்காகத்தான் கடினமான பாஷைபோட்டுப் புத்தகங்களை எழுதுகின்றார்கள். அதைப் படித்துக் கஷ்டப்பட்டுப் புரிந்துகொண்டால் நமக்கும் தெரிந்ததே எனத் திருப்தி ஏற்படுகிறது.

**விலைகொடுத்து வாங்குங்கள் :**

ஆதீனத்தில் புத்தகங்கட்கு விலை சரசமாகப்போட்டிருக்கிறார்கள். விலை ஏன் ? பெயரே தருமபுர ஆதீனமாயிற்றே ; தருமமாக விநியோகிக்கக்கூடாதா என்று கேட்கலாம். விலை இல்லையென்றால் ஒருசில பிரதிகளே அச்சிட்டு விநியோகிக்கமுடியும். ருசியான மாம்பழத்தைத் தின்கிறோம். கொட்டையைத்தூக்கி எறிந்துவிட்டால் மறுபடி பழந் தின்ன முடியுமா ? எங்காவது போட்டுவைத்திருந்தால் முளைத்திருக்கும். காலாந்தரத்தில் பழம் கொடுக்கும். தின்னலாம். அதுபோல விலைகொடுத்தால் கிடைப்பதைக்கொண்டு மேலும் அவர்கள் பிரதிகள் அச்சிட்டு இதராருக்கும் தர முடியும். ஆகவே விலைகொடுத்து வாங்குவதைத் தருமமாகக்கொள்ளலாம்.

**பாடல் தேன்போன்றவை :**

இந்த நிலையத்தில் விழாக்கள் நடத்த ஏற்பாடுசெய்யவேண்டும். மக்களுக்குப் பக்தி ஏற்பட்டு வளரச்செய்வது முக்கியம். நல்ல நாதஸ்வரக் கச்சேரிகளை அவ்வப்போது குறிப்பிட்ட காலத்தில் ஏற்பாடு செய்யலாம். திருவிழா நடத்தினால் பக்தி வளரும். முதலில் பிரசாதத்திற்கென வருகிறார்கள். காத்திருந்து பகவான் பாதத்திலிருந்து கிடைத்தது என்று தெரிந்ததும் பக்தி ஏற்பட்டுவிடுகிறதல்லவா ? நல்ல பிரசாரகர்களை தருவித்து ஆழ்வார், நாயன்மார்கள் பாட்டைச் சொல்லி அர்த்தம் விளக்கவேண்டும். அவை தேன்போன்றவை. இதற்காகத்தான் மண்டபம் கட்டப்படவேண்டும் என்கின்றேன். இந்தக்காலத்தில் இது சிரமமானதல்ல. சினிமாவுக்கு என்றால் மூன்று மாதகாலத்தில் கட்டிடம் வந்துவிடவில்லையா ? மக்கள் தாராளமாக உதவவேண்டும்.



## அமரர் ஸ்ரீ இராஜாஜி அவர்கள்

**சென்னை, தருமையாதீன சமயப் பிரசார நிலையத்தில்**

**27—12—53 இல் நடைபெற்ற**

**திருவெம்பாவை திருப்பாவை மாநாட்டில்**

**எதிர்பாராமல் கலந்துகொண்டு**

# நிகழ்த்திய அறவுரை

---

**மார்கழி மாதம் பக்திக்குச் சரியான மாதம் :**

இந்த டிசம்பர் மாதமே சந்தோஷப்படக்கூடிய மாதம். எங்கு பார்த்தாலும் பிரசங்கங்கள், கூட்டங்கள், பாட்டு, சங்கீதம் நடைபெறுகின்றன. ஆயிரக்கணக்கான வருஷங்களாக இந்த மார்கழி மாதத்தில் நாமெல்லாம் சந்தோஷமான வாழ்க்கையை நடத்தியிருப்பதாகத் தெரிகிறது. இந்த மாதத்தில் பாட்டுகள் பாடி, பேரானந்தம் பெறுவது ரொம்ப நாட்களாக ஏற்பட்டிருக்கிறது. பாட்டுக்காக நம் நாட்டில் இந்தப்பழக்கம் ஏற்படவில்லை. பெரிய மரத்தில் சிறு வெற்றிலைக்கொடி ஏறி, தனக்கு ஒரு ஆதரவைப் பெற்றுப் பிறருக்கும் சந்தோஷத்தை அளிக்கிறது. கோல் தேடியோடும் கொடிபோல் பழைய வழக்கத்தின் பேரில் பாட்டு ஏறி சந்தோஷத்தையும் இன்பத்தையும் தருகின்றது ஆகையால் இந்தப் பாட்டும் பழக்கமும் நம் நாட்டில் நீண்ட நாளாக உள்ளது. வாழ்க்கையை நடத்துகிறவர்களுக்குப் பக்தி இயற்கைப் பொருள். இந்த மாதம் பக்திக்குச் சரியான மாதம். வெய்யிலும் குளிரும் பக்குவமாகச் சேர்ந்த மாதம். தேகத்தைச் சரியாக வைத்துக்கொண்டிருக்கிறவர்கள் வைகறையில் துயிலெழுந்து ஸ்நானம் செய்து, பக்தியுடன் ஞானப் பாட்டுக்களைப் பாடிப் புதிய ஞானத்தையும் உணர்ச்சியையும் பெறுகின்றனர். நமது பழைய வழக்கங்களையும் பழைய பாட்டுக்களையும், பழைய நதிகள், பழைய குளங்களுடன் நமது ஆசாரியர்கள் அனுபவத்திலேயே சேர்த்து லேசாக நம்மை ஆட்கொள்ள இந்தப் பாட்டுக்களையும் செய்தார்கள். குழந்தைகளுக்குப் பாட்டும், பெரியவர்களுக்கு ஞானமும், நிஷ்டையிலிருப்பவர்களுக்குப் பக்தியும் எல்லாம் ஒன்றுதான். இதெல்லாம் இயற்கையாகவே திருப்பாவை, திருவெம்பாவையில் கலந்து கொண்டிருக்கிறது. அவரவர்களுக்கு வேண்டியதை அதில் கொள்ளலாம்.

**பக்திப்பாடல்களை ரஸித்து இன்புற வேண்டும் :**

பகலெல்லாம் வாழ்கை நடத்தி விட்டு, ராத்திரி நாம் தூங்கு கின்றோம். தூக்கம் தானாக வந்துவிடுகிறது. இந்த இயற்கையின் ஆச்சரியத்தைப் பாருங்கள். இது டாக்டர்கள் செய்ததா? இப்பொழுதுதான் அதிலுள்ளதை அறிந்து டாக்டர்கள் பிறருக்கு "ஒய்வெடுத்துக்கொள்ளவேண்டும்" என்ற மருந்தைச் சொல்லு கின்றனர். ஒய்வெடுத்துக்கொள்வதென்பது தூக்கந்தான். தூக்கத்தில் எவ்வளவு ஆனந்தம் பாருங்கள். கவலையே இல்லை. நான்கூட சிறையில் இருக்கும்போது பார்த்திருக்கிறேன். தூக்குதண்டனை அடைந்த ஒருவன் இன்னும் சில நாட்களில் "குழந்தைக்குத் தகப்பனும், மனைவிக்குக் கணவனும் இருக்கப்போவதில்லை" என்று நினைத்துக் கவலை கொண்டாலும் இரவு வந்ததும் இயற்கையான தூக்கம் அவனை அடைந்து அந்தக் கவலைகளைமறந்து அவனை ஒய்வெடுத்துக்கொள்ளச் செய்கிறது. அதனால்தான் மனிதனுக்கு ஏற்பட்ட நூறுபிராயத்தில் பாதி தூக்கமாக இருக்கிறது. சிலர் இந்த வாழ்க்கையில் பற்றுதல் காரணமாகத் தூக்கத்தைக் குறைத்துக்கொள்ளுகிறார்கள். ஆகையால் தூங்குவது க்ஷேமந்தான். மனிதன் நீண்டநாள் ஜீவித்திருப்பதற்கும் அவசியமானது. இந்தத் தூக்கத்தை விட்டு எழுந்து ஸ்நானம்செய்து பக்திப் பாடல்களை அனுபவித்து ரசித்து இன்புறுவது கஷ்டமாகத் தான் இருக்கும்.

**தெய்வத்துக்குத்தான் தெரியும் :**

ஆனால் இந்தத் தூக்கம் வேறு. இந்தப் பாட்டுக்களில் சொல்லப் படும் தூக்கத்தின் அர்த்தம் வேறு. இதை நன்கு அறிந்துகொள்ள வேண்டும். அஞ்ஞானமாகிற தூக்கம் போகவேண்டும். இந்த இருள் நீங்கினால் அகம்பாவம் குறையும். இது முக்கியமான உட்கருத்து. நாம் பிரதிதினமும் ஆகாரம் உட்கொள்ளுகிறோம். இந்த ஆகாரம் தேகத்தில் விஷமாகவும் மாறுகிறது. தேகத்தின் அங்கங்கள் இந்த விஷத்தை அகற்றி உணவுச்சத்தை ஏற்கிறது. மாறி மாறி இந்த வேலை நடக்கிறது. கெடியாரம் என்றே வைத்துக்கொள்ளலாம். இப்படி மாறி மாறித் திரும்புவதே உயிர். இந்தஉயிர்தான் ஆகாரத்தை உட்கொள்ளுகிறது. ஆகாரத்திலிருந்து உண்டாகும் விஷமே தூக்கத்தைக் கொடுக்கிறது. சிலருக்குத் தூக்கம் வருவதில்லை என்றால் விஷத்தை மருந்தாகக் கொடுக்கின்றனர். அதுதான் தூக்கத்தை உண்டாக்குகிறது. சிறிதுகொடுத்தால் போதையும், தூக்கமும் உண்டாகிறது. அதிகமானால் அந்த உயிருக்கே ஆபத்து உண்டாகிறது. பின் ஒரு காலத்தில் இந்தத் தூக்கமே வராமல் நாள் முழுவதும் இரவு பகலாக வாழ்க்கை நடத்த ஆராய்ச்சி மூலம் கண்டு பிடிப்பார்களோ என்னவோ தெரியாது? காலராவைத் தடுக்க கிருமியைச் செலுத்து

வதுபோல, மாடுகளுக்கு மருந்துமூலம் கருத்தரிக்கச் செய்வதுபோல, மனிதன் எப்பொழுதும் தூங்காமல் இருக்க வழி கண்டுபிடிக்கலாம். ஏனெனில் அப்பொழுதுதானே எப்பொழுதும் இவனுக்குக் கவலை ஏற்பட்டுக்கொண்டே இருக்கும். (சிரிப்பு) அணுவை ஆராய்ச்சி செய்து இறுதியில் மனுஷ்யனை நிர்மூலமாக்க உபயோகிக்கவில்லையா? கிணறுவெட்டப் பூதம் புறப்பட்டதுபோல் என்ன என்ன வருமோ? யார் கண்டது? தெய்வத்துக்குத்தான் தெரியும்.

**ஆண்டவன் படைப்பு வியப்பளிக்கிறது :**

ரோஜாச் செடியைப் பாருங்கள். முள்ளுடன்கூடிய இச்செடியிலிருந்து இந்த அழகான, மணமான, இன்பமான, புஷ்பம் வரும் என்று யார் கண்டது? யார் உண்டாக்கியது? இந்த ரகசியத்தை அறிந்தால் உலகை அறியலாம். கடவுளை அறியலாம். ஜலத்தை ஆராய்ச்சிசெய்து அதில் இரண்டு வாயுக்கள் இருப்பதாகக் கண்டு பிடித்தனர். ஆனால் இந்த இரண்டுவாயுவையும் சேர்த்து ஜலமாக்கி விடுவதென்பது சுலபமா? சாத்தியமா? வேண்டுமானல் ஜலத்தை இரண்டு வாயுக்களாகப் பிரிக்கலாம். மனுஷ்யனைக்கூட அங்கம் அங்கமாகப் பிரித்துக்காணலாம். டாக்டர்களைக் கேட்டால் விளக்கிச் சொல்லுவார்கள். அங்கங்களைக்கொண்டு மனுஷ்யனைச் செய்ய முடியுமா? அது ஆண்டவனுடையது. அது அவன் சக்தி. இவ்விதம் ஒவ்வொரு பொருளையும் தெரிந்துகொண்டால் ஆஸ்திகம் தானுக வரும். ஆஸ்திகம் என்பதுதான் அடக்கம். ஆண்டவன் படைப்பில் எவ்வளவு வியப்பும் சந்தோஷமும் உண்டாகிறது. இந்த இரண்டும் கலந்ததே ஆஸ்திகம். அறிவுக்கும் பக்திக்கும் விரோதமில்லை. ஆனல் அடக்கம் வேண்டும். இதுதான் ஆஸ்திக இயக்கம்.

**அடக்கத்தால் பக்தியும் ஆஸ்திகமும் வளரும் :**

ஒரு வேப்பம்கொட்டையை எடுத்துக்கொண்டு பாருங்கள். அதிலிருந்து எவ்வளவு பெரிய மரம் உண்டாகிறது. பூ காய் எல்லாம் ஏற்பட்டிருக்கின்றன. அதிலும் எவ்வளவு கசப்பு ஏற்பட்டிருக்கிறது. அந்த வேப்பங்கொட்டையில் இருக்கும்போதே ஆண்டவன் இதை எல்லாம் சங்கற்பித்துவிட்டான். இதுதான் இப்படி என்ருல் ஒரு சிறு ஆலம் பழத்தில் எவ்வளவு விதைகள்! அவ்வளவு ஆயிரக்கணக்கான விதைகளில் ஒன்றினுள் எவ்வளவு பெரிய மரத்தை அடக்கிக்கொண்டிருக்கிறது. அதனல் ஆண்டவன் பெருமையையும் படைப்பையும் அறியலாம்.! ஆனல்! அடக்கமும் பக்தியும்! வேண்டும். படிக்காதவர்கள் கூட அறிவார்கள். படித்தவர் பாடுதான் கஷ்டம். படித்தவர்களைத் தான் ஆண்டவன் காப்பாற்ற வேண்டும்போலிருக்கிறது. அவர்களுக்குத்தான் அந்த பக்தியும் அடக்கமும் இலேசில் வருவதில்லை. ஒரு

மோட்டார் மணிக்கு 25 மைல் வேகம் போனாலே உள்ளே உட்கார்ந்திருக்கும்போது பயம் மாதிரி இருக்கிறது. இப்பொழுது நாமெல்லாம் உட்கார்ந்திருக்கிறோம் என்றல்லவா நினைத்துக்கொண்டிருக்கிறோம். உண்மையில் அப்படியில்லை. மணிக்கு 72,000 மைல் வேகத்தில் சுற்றிக்கொண்டிருக்கிறோம். இதை நாஸ்திகர்கள்கூட ஒப்புக்கொள்ளுவார்கள். இதற்குள்தான் ஒருவருக்கொருவர் சண்டை பிடித்துக்கொள்வது, திட்டுவது, கோபம் தாபம் எல்லாம். இவ்வளவு வேகமாகச் சுற்றும் வண்டிக்குள் ஏறிக்கொண்டிருக்கிறோமே என்று அறிந்தால் அடக்கம் ஏற்படும். பக்தியும் பிறகு அதிலிருந்து ஆஸ்திகமும் ஏற்படும். திருப்பாவை, திருவெம்பாவைகளைப் படியுங்கள். உலகத்தில் பக்தியை உண்டாக்கி வளர்க்கக்கூடிய நூல் இவற்றைத் தவிர வேறு இல்லை. கஷ்டப்பட்டுப் படியுங்கள். பாடத்தெரிந்தால் மிக சிலாக்கியம். தானாகவே ஆஸ்திகம்வரும். ஆண்டவன் பிரபாவம் நன்குதெரியும்.

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

**Dharmapuram Adhinam**

Sri Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil.

It was a pleasure to visit this temple this morning. The peacefnl atmosthere of this place is conducive te spirituel inspiration. I offer my respectful felicitations to those who administer the temple.

Sankara Prasad Mitra,
3—12—78. Chief Justice of West Bengal.

* * * *

Dharmapuram Adhinam

**Sri Amirthagateswaraswamy Devasthanam, Tirukkadaiyur.**

A visit to this temple in an occasion one should remember through out life.

**Sankara Prasad Mitra,**
3—12—78. **Chief Justice of West Bengal.**

"ஞானசம்பந்தம்"

# புத்தாண்டு வாழ்த்து

(இரா. செ.)

சித்திரையில் புத்தாண்டு தமிழர்க் கெல்லாம்
சிறந்துவரும்; வளஞ்சேரும்; மகிழ்வு பூக்கும்
இத்தரையில் எழில்ஞான சம்பந் தத்தின்
இனிதான புத்தாண்டோ கார்த்தி கையில்;
புத்தமுதச் சுவையோடு முப்பத் தேழு
புகழ்மிக்க ஆண்டுகளில் கடமை ஆற்றி
கொத்தான சுவையோடு முப்பத் தெட்டாம்
குலவுகின்ற நல்லாண்டுத் தொடங்கக் கண்டோம்!

காலத்தின் தேவையினை அறிந்து அன்று
கவின்மிக்க ஏடிதனைத் தோற்றி னரும்,
கோலத்துப் புள்ளிகள்போல் அழகு சேர்த்துக்
குன்றமென வளர்த்திட்ட ஞானத் தாரும்
பாலமெனப் புதுமைகளைப் பழமை யோடு
பாங்காக இணைத்திட்டு வளங்கண் டாரும்
சாலமிகப் பாராட்டிப் போற்றத் தக்கார்
சான்ருண்மை உடையார்கள் புகழே வெல்க!

அடக்கமே உருவாகத் தமிழர் இல்லம்
ஆயிரங்கள் செல்கின்ற புனித ஏடு
முடக்கமிலா நடையிட்டு மக்கள் நெஞ்சின்
மூடத்தை எரித்திட்டு வளர்தல் கண்டோம்!
மடமகற்றி மனப்புன்மை களையும் ஏட்டின்
மாட்சிமைகள் உலகறியும்; புதிய ஆண்டில்
திடமாகக் காலூன்றி நடைகள் போடும்
தெய்வீக ஏடிதனைப் போற்றிக் கொள்வீர்!

உ

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமையாதீனம்

**26-ஆவது குருமகாசந்நிதானம்**

**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்**

**திருவாய்மலர்ந்தருளிய**

# ஆசியுரை

தருமை ஆதீனத் திருமடத்தின் கொள்கை, சைவசித்தாந்த மாகும். அது பதி – கடவுள், பசு – உயிர், பாசம் – தளை என்னும் முப்பொருள் உண்மையை அடிப்படையாகக்கொண்டது. கடவுள் ஒருவர். உயிர்கள் பல. பாசம் ஒன்று. கடவுள் ஒருவரே ஆயினும் அனேக சக்திகளை உடையவர். அதுபோல் பாசமும் ஒன்றேயாயினும் அனேக சத்திகளை உடையது. கடவுள் அறிவு (ஒளி) மயமானவர். பாசம் அறியாமை (இருள்) மயமானது. உயிர்கள் ஒளியுடன் சேரும் போது ஒளியாகவும், இருளோடுசேரும்போது இருளாகவும் சார்ந்ததன் வண்ணமாக இருக்கும் தன்மையுடையவை. இறைவன் தானே எல்லாவற்றையும் பிற உதவி இன்றி அறிபவன். உயிர்களோ இறைவன் உடல் முதலிய கருவிகரணங்களைக்கொடுத்து அறிவித்தால் அன்றித் தானே அறியும் தன்மை இல்லாதன. பாசமோ அறிவித்தா லும் அறியாத சடப்பொருளாயுள்ளது. அதாவது அறிவில்லாதது.

**சாதகன் யார் ?**

கடவுளுக்குச் சாதனை தேவை இல்லை. அவர் விருப்பு வெறுப்பு அற்றவர். அவருக்கு எதுவும் தேவை இல்லை; அதேபோல் பாசம் அறிவில்லாதது. ஆதலால், அது தானே அறிந்து செயல்படாது.

---

3—12—78 அன்று மேற்கு வங்காள உயர்நீதிமன்றத் தலைமை நீதிபதி திரு. சங்கர பிரசாத் மித்திரா அவர்கள் ஸ்ரீலஸ்ரீ குருமகா சந்நிதானம் அவர்களிடம் விண்ணப்பித்துக்கொண்ட ஐயங்களைத் தெளிவிக்கும் வகையில் அருளியது.

அதற்குத் தேவையும் இல்லை. உயிர்கள் சித்தாகிய கடவுளோடு கூடியகாலத்தில் சித்தாகவும், அசித்தாகிய பாசத்தோடு கூடிய காலத்தில் அசித்தாகவும் இருக்கும் தன்மையுடையதாக இருப்பதால் சாதகனாக இருக்கும் தகுதி உயிர்கட்கே இருக்கின்றது.

சாதனங்கள் என்ன ?

சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பன சாதனங்களாக உள்ளன. சரியை என்பது உடலால் தொண்டுசெய்தல். அதாவது திருக்கோயில் திருப்பணிகள் முதலியன. கிரியையாவது, உடலும் உயிரும் இணைந்து தொண்டுசெய்தல். பூசனை, வழிபாடு முதலியன. யோகம் என்பது சரியை கிரியைகளால் உயிருக்குக் கிடைத்த அனுபவத்தில் ஒன்றி ( அழுந்தி ) நிற்றல். ஞானமாவது, அறிவொளியாகத் திகழும் இறைவன் வேறு தான் வேறு என்றில்லாமல் இரண்டறக் கலந்து நிற்கும் சுத்தாத்துவிதநிலை. இந்நான்கும் சாதனை நிலையில் வேறே தவிர, பொருள் நிலையில் ஒன்றே. இதனைத் தாயுமானார் தெளிவாக நமக்குப் புரியும்நிலையில் கூறுகிறார்.

" விரும்பும் சரியைமுதல் மெய்ஞ்ஞானம் நான்கும்
அரும்புமலர் காய்கனிபோல் அன்றோ பராபரமே "

என்பது அவர் வாக்கு.

நடந்து காட்டிய ஆசாரியர்கள் :

இந்த நான்கு நிலைகளையும் நமக்குக் காட்டியவர்கள் நமது சமய ஆசாரியர்கள். சரியை வழி நின்று காட்டியவர் திருநாவுக்கரசர். கிரியைவழி நின்று காட்டியவர் திருஞானசம்பந்தர். யோகநெறி நின்று காட்டியவர் சுந்தரர். ஞானநெறி நின்று காட்டியவர் மாணிக்க வாசகர். இவற்றைத் தாசமார்க்கம், சத்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்றும் கூறுவர். தாச மார்க்கம் இறைவனை ஆண்டவனாகவும் தன்னை அடிமையாகவும் கொண்டு வழிபடுதல். இதற்கு அப்பரடிகள் உதாரணமாகத் திகழ்கிறார். சத்புத்திர மார்க்கமாவது இறைவனைத் தந்தையாகவும் தன்னைப் புத்திரனாகவும் கொண்டு வழிபடுதல். இதற்குச் சம்பந்தர் வாழ்வு உதாரணமாகும். சகமார்க்கமாவது இறைவனைத் தோழனாகக்கொண்டு வழிபடுதல். இதற்குச் சுந்தரர் வாழ்வு எடுத்துக்காட்டு. சன்மார்க்கம் தலைவன் தலைவி முறை. இதற்கு மாணிக்கவாசகர் எடுத்துக்காட்டாகத் திகழ்கிறார்.

**ஞானிகளும் வழிபட வேண்டுமா?**

ஜீவன்முத்தர்களாகத் திகழும் பெரியோர்கள் கோயிலுக்குப் போகவேண்டுமா ? அவர்கள் உள்ளத்தில்தான் கடவுள் இருக்கிருரே! அவர்கள் நடமாடும் தெய்வங்களாகப் போற்றப்படுகிருர்களே ! அவர் களுக்கு வழிபாடு எதற்கு என்று சிலர் நினைக்கிருர்கள். உலோகப் பாத்திரங்களை அன்ருடம் விளக்கவேண்டும். விள்க்காவிட்டால் அழுக்கேறிவிடும். அதேபோலத்தான் சாதனைபெற்ற உயிர்களும் நல்லவர்களுடைய கூட்டுறவும், இறைவழிபாடும் நாளும் செய்துவர வேண்டும். செய்யாதுவிட்டால் மீண்டும் அறியாமை அவர்களைப் பற்றி, கீழ் நிலையில் தள்ளிவிடும். இதுபற்றியே மெய்கண்டாரும் சிவ ஞானபோதத்தின் இறுதி நூற்பாவில்,

“ செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடும் மரீஇ
மால்அற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரன்எனத் தொழுமே ”

என்று அருளிச்செய்தார். ஔவையாரும்,

“ சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்
வைத்ததொரு கல்வி மனப்பழக்கம் — நித்தம்
நடையும் நடைப்பழக்கம் நட்பும் தயையும்
கொடையும் பிறவிக் குணம் ”

என்று கூறியிருப்பதும் காணலாம்.

பாசிபடர்ந்த குட்டையில் கல்லெடுத்துப்போட்டால் பாசிவிலகி, தண்ணீர் தெளிவாகத்தெரியும். சிறிது நேரத்தில் மீண்டும் மூடிவிடும். உறைக்குள் இருக்கும் கண்ணுடியை எடுக்கும்போதெல்லாம் நாம் ஏன் துடைத்த பிறகு போட்டுக்கொள்ளுகிருேம்? அழுக்கு அவ் வளவு நுட்பமாக இருக்கிறது. எனவே ஆணவமாகிய அழுக்கு முத்திக் காலத்திலும் நம்மைத் தொடர்ந்திருக்குமாதலால் உயிர்கள் எவ்வளவு மேல்நிலைக்குச்சென்றபோதிலும் இறைவழிபாடும் அடியவர் கூட்டுறவும் என்றும் உயிர்களுக்குத் தேவையானதே.



# மார்கழிமாதச் சிறப்பு நாட்கள்

1 (16-12-78) சனி, தனுர்மாதபூசை ஆரம்பம். ஷடசீதி புண்யகாலம். திருவையாறு மாதப்பிறப்பு தீர்த்தம்.

2 (17-12-78) ஞாயிறு, தருமை 2-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ ஆனந்தபரவச தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

7 (22-12-78) வெள்ளி, இயற்பகை நாயனுர் குருபூஜை.

10 (25-12-78) திங்கள், மானக்கஞ்சாற நாயனுர் குருபூஜை.

12 (27-12-78) புதன், மகாபிரதோஷம்.

13 (28-12-78) வியாழன், மாதசிவராத்திரி.

14 (29-12-78) வெள்ளி, சர்வ அமாவாசை, அனுமத்ஜயந்தி, கெர்ப்போட்ட ஆரம்பம். 2-52.

15 (30-12-78) சனி, சாக்கிய நாயனுர் குருபூஜை.

19 (3-1-79) புதன், சிதம்பரம், உத்தரகோசமங்கை முதலிய இடங்களில் திருவெம்பாவை உற்சவாரம்பம், திருவையாறு ஊஞ்சல் உற்சவ ஆரம்பம். தனுர்வியதீபாதம்.

21 (5-1-79) வெள்ளி, வாயிலார் நாயனுர் குருபூஜை.

23 (7-1-79) ஞாயிறு, தருமை 11-ஆவது குருமகாசந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சச்சிதானந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள் குருபூஜை.

24 (8-1-79) திங்கள், கிருத்திகைவிரதம், தருமை ஸ்ரீ தருமபுரீசுவரர் ஆலயத்தில் சண்முகர் அபிஷேகம்.

25 (9-1-79) செவ்வாய், வேளூர்க்கிருத்திகை, வைகுண்டஏகாதசி, திருக்கடவூரில் முனீஸ்வரபூஜை.

26 (10-1-79) புதன், மகாபிரதோஷம்.

27 (11-1-79) வியாழன், பின்னிரவு ஸ்ரீ நடராஜர் அபிஷேகம். கெர்ப்போட்ட நிவர்த்தி 5-15 திருக்கடவூர் ஸ்ரீ காலசங்காரமூர்த்தி அபிஷேகம்.

28 (12-1-79) வெள்ளி, **ஆருத்ரா தரிசனம்,** திருவெம்பாவை உற்சவ பூர்த்தி, பௌர்ணமி விரதபூஜை, சீகாழி ஸ்ரீ உமாமகேஸ்வரருக்கு உச்சிக்காலத்தில் புழுகாப்பு. மாத பூஜையில் நெய் அபிஷேகம். சடைய நாயனுர் குருபூஜை.

29 (13-1-79) சனி, போகிப்பண்டிகை.

# திருச்சத்திமுற்றம், திருப்பட்டீச்சரம் தலச் சிறப்புக்கள்

தருமையாதீனத் தமிழ்ப்புலவர்,
**வித்துவான். திரு. வி. சா. குருசாமி தேசிகர்** எம். ஏ.

பூவிரிபொழில்சூழ் காவிரி வளம்பெறும் சோழவளநாட்டில் தேவாரப்பாடல் பெற்றுள்ள சிவதலங்கள் 274 உள்ளன. அவற்றுள் காவிரித்தென்கரைத் தலங்களாக விளங்குவன 127 ஆகும். தஞ்சை மாவட்டத்தில் கும்பகோணத்தை அடுத்துவிளங்கும் திருச்சத்தி முற்றமும் திருப்பட்டீச்சரமும் காவிரித்தென்கரைத் தலங்களில் 22, 23-வது தலங்களாகத் திகழ்கின்றன.

திருப்பட்டீச்சரம் திருஞானசம்பந்தருக்கு இறைவன் முத்துப் பந்தர் அருளிய சிறப்புடையது. காமதேனுவின் மகள் பட்டி வழி பட்ட பெருமையை உடையது. திருச்சத்திமுற்றம் திருநாவுக்கரசர் திருவடிதீட்சை புரிந்தருளுமாறு வேண்டிய திருப்பதிகத்தைப் பெற்றது. அம்பிகை தவஞ்செய்து இறைவனை மணந்தபெருமை உடையது. இவ்விரு தலங்களும் அருகருகே உள்ளன. திருச்சத்தி முற்றத்தின் தெற்குவீதி, திருப்பட்டீச்சரத்தின் வடக்கு வீதியாக உள்ளது. இணைந்து விளங்கும் இவ்விருதலங்களின் வரலாற்றுச் சிறப்புகளைக் காண்போம்.

## திருச்சத்திமுற்றம்

கும்பகோணத்தை அடுத்து, தாராசுரம் புகைவண்டி நிலையத்தி லிருந்துதெற்கே 6 கி. மீட்டர் தூரத்தில் உள்ளது. கும்பகோணத்தி லிருந்து ஆவூர் செல்லும் நகரப் பேருந்தில் சென்றால் கோயிலை எளிதில் அடையலாம். கும்பகோணத்திலிருந்து மிலட்டூர் வழியாகத் தஞ்சைசெல்லும் பேருந்திலும் செல்லலாம்.

**தலப்பெருமை :**

இவ்வாலயத்தில் உள்ள சிவபெருமானை உமாதேவியார் பூசித்துத் தழுவி முத்தமிட்ட காரணத்தால் "திருச்சத்திமுத்தம்" எனத் திரு நாமம் வழங்கப்படுகிறது. இதனைத் திருநாவுக்கரசு சுவாமிகள்

"மட்டார்குழலி மலைமகள் பூசை மகிழ்ந்தருளும் சிட்டா திருச்சத்தி முற்றத்துறையுஞ் சிவக்கொழுந்தே" எனப் புகழ்ந்து பாடியுள்ளார். மேலும் இப்பொழுது இத்தலம் சத்திமுற்றம் என வழங்கப்படுகின்றது. இறைவனைச் சத்தி பூசித்த வரலாறு "சென்று சேர்ந்து திருச்சத்தி முற்றத்திருந்த சிவக்கொழுந்தைக், குன்ற மகடன் மனக்காதல் குலவும் பூசை கொண்டருளும், என்றும் இனிய பெருமானை" எனத் திருநாவுக்கரசு சுவாமிகள் புராணத்தும், "திருச்சத்தி முற்றத்திற் சென்று எய்தித் திருமலையாள், அருச்சித்த சேவடிகள் ஆர்வமுறப் பணிந்தேத்தி" எனத் திருஞானசம்பந்தமூர்த்தி சுவாமிகள் புராணத்தும் வரும் சேக்கிழார் பெருமான் வாக்காலும் அறியலாம்.

மேலும் இறைவி இறைவரைப்பூசித்து அவரது திருவுருவத்தினைத் தரிசிக்க விரும்பியதாகவும், சிவலிங்கத் திருமேனியினின்றும் சோதி தோன்றியதாகவும், இறைவி அவ்வளவில் இறைவரைக் கட்டித் தழுவிக் கொண்டதாகவும் கூறுகின்றார்கள். இவ்வாலயத்திலுள்ள மூலலிங்கப்பெருமானின் திருமேனியிலும் அடையாளம் காணப்படுகின்றது. மூலத்தானத்திற்குப் பக்கத்தில் இறைவி சிவலிங்கப் பெருமானைக் கட்டித்தழுவி முத்தமிட்ட திருக்கோலம் உள்ள திருவுருவத்தினையும் தரிசிக்கலாம்.

**கோயிலமைப்பு :**

நான்கு திருவீதிகளுக்குநடுவே கிழக்குநோக்கிப் பெரியகோயிலாக விளங்குகிறது. திருவாயிலில் வல்லபை கணபதி விளங்குகிறார். கோயில் வாயிலில் விளங்கும் வசந்த மண்டபம் பழுதடைந்துள்ளது. கருங்கல் திருப்பணியோடு பெரியமண்டபமாக இது விளங்குகிறது. இரண்டு பிராகாரங்கள் உள்ளன. இராஜகோபுரம் 5 நிலைகளோடு சிற்பங்களின்றி விளங்குகிறது. இரண்டாம் கோபுரம் கட்டைக் கோபுரம்.

வெளிப்பிராகாரம் மிகப் பெரியது. ஈசான திசையில் யாகசாலையும், அக்கினிமூலையில் பாகசாலையும் உள்ளன. சந்நிதியில் கொடிமரம் நந்தி பலிபீடங்கள் உள்ளன. அதையடுத்து முன்மண்டபம் உள்ளது. மண்டபத்தைக்கடந்து உள்ளே சென்றால் இரண்டாம் கோபுரவாயிலில் விநாயகர், முருகன் உள்ளனர். வடபுறம் அம்பாள் கோயில் தெற்கு நோக்கி உள்ளது.

இரண்டாம் கோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றால் நடராஜ சபையோடுகூடிய மகாமண்டபம் உள்ளது. எதிரே நால்வர் சந்நிதி விளங்குகிறது

சுவாமி சந்நிதியின் வாயிலில் தென்புறம் சோமாஸ்கந்தரும் வட புறம் சத்தி முத்தமளிக்கும் தல ஐதிகமூர்த்தியும் உள்ளனர். இவ் வைதிகச் சிற்பத்தின் பின்புறம் அம்பாள் ஒருகாலில் நின்று தவம் செய்யும் காட்சியைக் காணலாம்.

உட்பிராகாரத்தில் தென்மேற்கே தலவிநாயகரும், அடுத்து சோமாஸ்கந்தரும், ஆறுமுகரும், கஜலட்சுமியும் உள்ளனர். கர்ப்பக் கிருகக் கோஷ்டங்களில் தெற்கில் விநாயகர், நடராசர், முனிவர் தட்சிணாமூர்த்தி ஆகியோரும், மேற்கே இலிங்கோத்பவரும், வடக்கே பிர்மா, துர்க்கை ஆகியோரும் உள்ளனர். வடக்குப் பிராகாரத்தில் சண்டீசர் கோயில் தனியே உள்ளது. சுவாமி சந்நிதியிலிருந்தே இவரைத் தரிசிக்கலாம். நடராஜர் சபையை அடுத்துப் பழைய அம்பாள் திருவுருவம் உள்ளது.

உள்ளே சென்றால் அர்த்த மண்டபத்தை அடையலாம். அதைக் கடந்து உள்ளே செல்லும்போது விநாயகர் துவாரபாலகரைத் தரிசிக் கலாம். சுவாமிசந்நிதி மிக்கசிறப்புடையதாகத் திகழ்கிறது. அப்பர் சுவாமிகள் திருவடி தீட்சை புரிந்தருளுமாறு வேண்டியபோது நல் லூருக்கு வருமாறு அருள்புரிந்த மூர்த்தி இவர்.

அம்பாள்கோயில் முதற்பிராகாரத்தில் உள்ளது. அம்பிகை தவம் செய்த தலமாதலால் இச்சந்நிதி மிக்க சிறப்புடையதாகத் திகழ்கின்றது

**மூர்த்திகள் :**

இறைவன் திருப்பெயர் அருள்மிகு சிவக்கொழுந்தீசர். அப்பர் தாம் அருளிய திருப்பதிகத்துள் இப்பெயரைப் பாடல்தோறும் குறிப் பிடுகின்றார். இறைவி திருப்பெயர் அருள்மிகு பெரியநாயகி. இத்தலத் தில் உள்ள தழுவக்குழைந்த நாதர் திருவுருவம் மிக்க அழகுடையது.

**தீர்த்தம் :**

கோயிலுக்கு வெளியே உள்ளது. சூல தீர்த்தம் எனவும் சூரியதீர்த்தம் எனவும் வழங்கப்படுகிறது.

**அப்பர் திருவடிசூட்ட வேண்டுதல் :**

திருநாவுக்கரசு சுவாமிகள் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருச்சத்திமுற்றம் வந்தடைந்தார். அம்பிகை செய்தருளிய பூசையை ஏற்று மகிழும் சிவக்கொழுந்தீசரைப் பணிந்தார். பெருமானே கூற்று வன் என்உயிரை இவ்வுடம்பினின்றும் பிரித்து வருத்துதற்குமுன்,

நின் செந்தாமரைபோலும் திருவடிகளை என்தலைமேல் சூட்டியருளுக எனவேண்டிக்கொள்ளும் முறையில்,

கோவாய் முடுகி அடுதிறல் கூற்றம் குமைப்பதன்முன்
பூவார் அடிச்சுவடு என்மேல் பொறித்துவை போகவிடில்
மூவா முழுப்பழி மூடுங்கண்டாய் முழங்கும் தழற்கைத்
தேவா திருச்சத்தி முற்றத் துறையும் சிவக்கொழுந்தே.

எனத் தொடங்கித் திருப்பதிகம் பாடியருளினர். இவ்வேண்டுகோளைச் செவிமடுத்த இறைவன், நல்லூருக்கு வருமாறு பணித்தருளினர். அவ்வருள் மொழிகேட்டு அகம்மகிழ்ந்த அப்பரடிகள் நல்லூருக்குச் சென்று இறைவனைப் பணிந்தெழுந்தார். அப்போது சிவபெருமான் அப்பர் திருமுடியில் தம் திருவடிகளைச் சூட்டியருளினர்.

**திருஞானசம்பந்தர் வழிபட்டது ;**

திருவலஞ்சுழி இறைவனைப்பணிந்து மகிழ்ந்த திருஞானசம்பந்தர் அடியார் குழாங்களோடு பழையாறை மேற்றளியை வணங்கிக் கொண்டு திருச்சத்திமுற்றத்திற்கு எழுந்தருளினர். திருமலையாள் அருச்சித்த சிவபெருமான் சேவடிகளைப்பணிந்தார். கருச்சுற்றில் அடையாமல் கைதருவார் கழல்பாடிப் பரவினர். (இத்திருப்பதிகம் இதுபோது கிடைக்கவில்லை. சிதைந்தபதிகங்களில் இதுவும் ஒன்ருகும்) இத்தலத்திலிருந்து திருப்பட்டீச்சரம் சென்று வணங்கி மகிழும் விருப்போடு புறப்பட்டார். முதுவேனிற்காலம். நண்பகற்போதில் கடு வெயிலையும் பொருட்படுத்தாது புறப்பட்ட திருஞானசம்பந்தருக்குப் பட்டீச்சரத்து இறைவர் பூதகணங்களின் வாயிலாக முத்துப்பந்தர் வழங்கியருளினர். திருஞானசம்பந்தர் இத்தலத்திலிருந்து இறைவன் அருளிய முத்துப்பந்தரின் நீழலில் திருப்பட்டீச்சரம் சென்று பட்டீசுரரை வணங்கித் திருப்பதிகம் பாடி இன்புற்ருர்.

**தழுவக்குழைந்தது :**

காஞ்சிபுரத்தில் அம்பிகை இறைவனைத் தழுவக்குழைந்தது போலவே இத்தலத்திலும் நிகழ்ந்ததாகச் சொல்லப்படுகிறது. திருக்கயிலாயமலையில் சிவபெருமானேடு உடனெழுந்தருளி விளங்கிய அம்பிகை ஆகமங்களின் அரும்பொருளையெல்லாம் இறைவன் சொல்லக்கேட்டு மகிழ்ந்து பெருமானைப் பூசைசெய்து வழிபட்டு அருள்பெற விழைந்தாள்.

எண்ணில் ஆகமம் இயம்பிய இறைவர்தாம் விரும்பும்
உண்மை யாவது பூசனை எனவுரைத் தருள
அண்ண லார்தமை அர்ச்சனை புரியஆ தரித்தாள்
பெண்ணின் நல்லவ ளாயின பெருந்தவக் கொழுந்து.

இறைவன் திருச்சத்திமுற்றத்தில் தம்மைப் பூசனை புரிந்தருளு மாறு பணித்தார். அம்பிகை இத்தலத்தை அடைந்து காவிரிக்கரை யில் இறைவனைத் தாபித்துப் பூசனைபுரிந்தாள். வரந்தரும் பொருளாம் மலைவல்லி சிரம்பணிந்தெழு பூசையை ஏற்றருள விரும்பிய இறைவன் காவிரியில் வெள்ளம்வருமாறு செய்தார். ஆற்றுவெள்ளம் அன்பு வெள்ளத்திற்குமுன்பு நிற்குமா? அம்மை இறைவனை ஆரத் தழுவி னாள். வெள்ளம் தணிந்தது. இறைவன் அம்மையைத் தழுவக் குழைந்தார். பூசனையை ஏற்று வேண்டும் வரங்களை அருளுமாறு அம்மை வேண்டினாள். பெருமானும் உவந்து அருள்செய்தார்.

நாரையை விளித்துப் பாடிய சத்திமுற்றப் புலவர் இத்தலத்தைச் சேர்ந்தவர்.

† **கல்வெட்டுக்கள் :**

இவ்வூரிலுள்ள திருச்சத்திமுற்றமுடையார் திருக்கோயிலில் சோழ மன்னர்களில், திரிபுவனச் சக்கரவர்த்தியாகிய குலோத்துங்கசோழ தேவர், "கடல்சூழ்ந்த" என்று தொடக்கமுள்ள மெய்க்கீர்த்தியை யுடைய இராசகேசரிவர்மராகிய இராசாதிராசதேவர், மதுரையும் ஈழமும் கருவூரும் பாண்டியன் முடித்தலையுங் கொண்டருளின மூன்றாங் குலோத்துங்க சோழதேவர் இவர்கள் காலங்களிலும்; விசய நகரபரம்பரையினரில் பிறந்த ராயமகாராயர் மகாமண்டலீஸ்வர கோப்பையதேவ மகாராசர், வீரப்பிரதாப தேவராய மகாராயர் இவர்கள் காலங்களிலும் செதுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் இருக் கின்றன.

கோபுரத்தின் அடிப்பகுதியிலுள்ள கல்வெட்டு அக்கோபுரவாசல் மகாமண்டலீஸ்வர கோப்பையதேவ மகாராசா அவர்களால் கட்டப் பட்டதையும், வீரப்பிரதாபதேவராய மகாராயர் காலத்துக் கல்வெட்டு மகாமண்டலேஸ்வர திருமலையதேவ மகாராசர் திருநறையூர்ப்பற்று எல்லூரைத் திருச்சத்திவனப்பெருமாளுக்கு நாள் வழிபாட்டுச் செல விற்கும் திருவமுதுக்குமாகக் கொடுத்துள்ளதையும், சோழமன்னர் களின் கல்வெட்டுக்கள் நுந்தா விளக்கு எரிப்பதற்குக் காசு ஆடு இவைகளை அளித்ததோடு, நிலம் அளித்த செய்தியையும் குறிப்பிடு கின்றன. ஆடுகளை அளித்தவன் சயங்கொண்ட சோழமண்டலத்துப் பழையனூர் நாட்டுப் பழையனூர் அமரகோனாகிய வேதவனம் உடை யான் கருணாகரதேவன் ஆவன். இக்கல்வெட்டுக்களில் இறைவர் திருச்சத்திமுற்றம் உடையார் திருச்சத்திவனப்பெருமாள் என்னும்

---

† See the Annual Report on South Indian Epigraphy for the year 1927. Numbers 262—270.

திருப்பெயரால் குறிக்கப்பெற்றுள்ளனர். மூன்ருங் குலோத்துங்கசோழ தேவருடைய கல்வெட்டு திருச்சத்திமுற்றம் உடையார்க்குச் சொந்தமான நிலங்களின் வரிகளை வசூலிக்கும் விதிகளைப்பற்றிக் குறிப்பிடுகின்றது. மண்டபத்தின் கருங்கல்தூண்களிலுள்ள ஒரு கல்வெட்டு, இலுப்பையூர்உடையபிள்ளை ஆண்டார் என்னும் பெயரைக்குறிப்பிடுகின்றது. மற்ருெருகல்தூணில்உள்ள கல்வெட்டு உபயநாயகப்பிச்சன் என்பவன் திருநீறு அணிபவர்களின் அடிமை என்பதைத் தெரிவிக்கிறது. இங்குள்ள கல்வெட்டுக்கள் திருச்சத்திமுற்றம் குலோத்துங்க சோழவளநாட்டுத் திருநறையூர்நாட்டுக்கு உட்பட்ட ஊர் என்பதைக் குறிப்பிடுகின்றன. "கடல்சூழ்ந்த" என்று தொடங்கும் மெய்க்கீர்த்தியையுடைய இராசகேசரி இராசாதிராச தேவரின் ஐந்தாம் ஆண்டு எண்பத்தெட்டாம் நாளில் செதுக்கப்பட்ட கல்வெட்டு திருச்சத்திமுற்றம் உடையார் கோயில் இராசராசபுரத்தில் இருப்பதை உணர்த்துகின்றது. எனவே அம்மன்னன் காலத்தில் திருச்சத்திமுற்றத்துக்கு இராசராசபுரம் என்னும் வேறு பெயர் வழங்கியிருந்தது புலனுகும்.

## திருப்பட்டீச்சரம்

இத்தலம் தஞ்சை மாவட்டம் கும்பகோணம் வட்டத்தில் தாராசுரம் புகைவண்டி நிலையத்திலிருந்து தென்மேற்கே 4 கி. மீட்டர் தூரத்தில் இருக்கிறது. கும்பகோணத்திலிருந்து ஆவூர் செல்லும் நகரப்பேருந்துகளிலும் ஆவூர் மிலட்டூர் திருக்கருகாவூர் வழிகளில் தஞ்சைசெல்லும் பேருந்துகளிலும் சென்ருல் கோயில் வாயிலில் இறங்கலாம்.

காமதேனுப் பசுவின் புதல்வியரில் பட்டி என்னும் பசுபூசித்ததால் இத்தலம் பட்டீச்சரம்என்ற பெயரைப்பெற்றது. ஈச்சரம்-கோயில் பட்டி பூசித்த கோயில் என்ற பொருளைத்தரும் பட்டீச்சரம் என்னும் கோயிற்பெயரே ஊர்ப்பெயராக வழங்கப்படுகிறது.

கோயில் தூண் ஒன்றில் பட்டிப்பசு தனது முலைக்காம்புகளால் பால் சொரிந்து வழிபடுவது போன்ற சிற்பம் அமைக்கப்பெற்றுள்ளது. இறைவன் சந்நிதியில் சுதை உருவிலும் இச்சிற்பம் அமைக்கப்பெற்று உள்ளது. திருஞானசம்பந்தர் காலத்தில் பழையாறையைச் சேர்ந்த மழபாடி என்று இத்தலப் பெயர் குறிக்கப்பெற்றுள்ளது. பழையாறை - சோழமன்னர்கள் முடிசூடிக்கொள்ளும் ஐந்து நகரங்களில் ஒன்று. இவ்வூரை அடுத்துள்ள மழபாடி என்னும் பொருளில் திருஞானசம்பந்தர் 'பொழில் சூழ் பழைசையுள் மாடமழபாடி உறை பட்டிசரம்' எனப் புகழ்ந்து போற்றியுள்ளார். கொள்ளிடநதியின் வடகரையில் விளங்கும் திருமழபாடியே இன்று அப்பெயரால் வழங்கப்பெறுகிறது.

அம்பிகை தவம் செய்த தலமாதலால் தேவிவனம் சக்தி வனம் என்றும் இத்தலம் வழங்கப்பெறுகிறது. இதற்கு அடையாளமாகக் கோயிலில் ஓர் இடத்தில் ஒற்றைக் காலில் நின்று கையைத்தலைமேல் வைத்துக்கொண்டு தவம் செய்யும் நிலையில் அம்பாள் திருவுருவம் ஒன்றுள்ளது.

இத்தலம் பஞ்சநந்திக்ஷேத்திரம். நந்திகள் ஐந்தும் சந்நிதியிலிருந்து விலகியே உள்ளன.

**கோயிலமைப்பு :**

பட்டீச்சரம் வளமானசோலைகளாலும் வயல்களாலும் சூழப்பெற்று உள்ளது. கோயில் ஊரின் நடுவே அழகுறத் திகழ்கிறது. நான்கு வாயில்களிலும் இராஜகோபுரங்கள் உள்ளன. இரண்டாம் கோபுரம் பெரியது. ஐந்து பெரிய கோபுரங்களோடு கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. கோயில் மூன்றுபிராகாரங்களை உடையது.

இராஜகோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றதும் மூன்றும் பிராகாரம். விலகிய நந்திபலிபீடங்கள் உள்ளன. மேலும் சென்றால் ஞானவாவி தீர்த்தம் உள்ளது. இப்பிராகாரத்தின் வட பால் துர்க்கையம்மன் வடக்கு நோக்கி எழுந்தருளி விளங்குகின்றார். இரண்டாம் கோபுர வாயிலில் விநாயகர், முருகன் எழுந்தருளியுள்ளனர். இரண்டாம் கோபுரத்தைக் கடந்து உள்ளே சென்றால் இங்கும் விலகிய நந்தியைக் காணலாம்.

கோயில் வாயிலில் உள்ள அலங்காரமண்டபம் மிக்க அழகோடும் பெரிதாகவும் திகழ்கின்றது. தெற்கே தேவாரம் அருளிய மூவர் சந்நிதி உள்ளது. மேற்கே மதவாரணப்பிள்ளையார் சந்நிதி உள்ளது கிழக்கே யாகசாலையும் பைரவர் சந்நிதியும் உள்ளன. நுழை வாயிலில் அலங்கார மண்டபம்உள்ளது. மூன்றுவதுவாயிலைக்கடந்து உள்ளேசென்றால் முதற்பிராகாரம். தெற்கே சப்த கன்னிகைகள் ரேணுகாதேவி, மேற்கே சுவர்ண விநாயகர் மகாலிங்கம் பால முருகன் ஆகியோரும் சண்முகர் இராமலிங்கம் மகாலட்சுமி ஆகிய மூர்த்திகளும் உள்ளனர். இங்கு கோடி தீர்த்தம் கிணறு வடிவில் உள்ளது.

வடக்கே அறுபத்துமூவர் மண்டபம். திருஞானசம்பந்தருக்கு இறைவன் முத்துப்பல்லக்குஅளித்தபடமும், இராமர் படமும்உள்ளன. அடுத்து நடராஜர் சந்நிதி, அடுத்து தபஸ் அம்மனும் பள்ளியறையும் உள்ளன. சூரியன் முதலியோர் உள்ளனர். அடுத்து அம்பாள் கோயிலுக்குச் செல்லும் பாதை உள்ளது.

வலமாக வந்து அர்த்த மண்டபத்துக்குள் நுழைகிறோம். தென் புறம் சோமாஸ்கந்தரும் வடபுறம் திருஞானசம்பந்தரும் உள்ளனர். கர்ப்பக்கிருகத்தில் பட்டீசர் எழுந்தருளி அருட் காட்சி வழங் குகிறார்.

இறைவனுக்கு இடப்பாகத்தில் அம்பாள் கோயில் கிழக்கு நோக்கி உள்ளது. இக்கோயில்மண்டபத்தில், திருப்பணிகளைச்செய்த கோவிந்த தீக்ஷிதரும் அவர் மனைவியும் உள்ளனர்.

அம்பாள் அருள்மிகு ஞானாம்பிகை அருட்கோலம் கொண்டு விளங் குகின்றார். தனிப்பிராகாரத்துடன் அம்பாள்கோயில் உள்ளது.

வெளிப்பிராகாரத்தில் வடக்குக் கோபுரவாயிலில் துர்க்கையம் மன் திருக்கோயில் வடக்குநோக்கி, தனிப்பொலிவோடு விளங்குகிறது. அன்பர்கள் பலரும் இவ்வன்னையைப் பக்தியோடு கொண்டாடி வழி பட்டு நலம்பெற்று வருகின்றனர்.

**மூர்த்திகள்:**

இத்தலத்தில் விநாயகமூர்த்தி அனுக்ஞை விநாயகர் மதவாரணப் பிள்ளையார் என்னும் பெயர்களால் வழங்கப்படுகின்றனர். சுவாமி பெயர் காமதேனுவின் புதல்வி பட்டிவழிபட்டதால் அருள்மிகு தேனு புரீசுவரர்எனவும் பட்டீசுரர்எனவும் வழங்கப்பெறுகின்றது. அம்பிகை அருள்மிகு ஞானாம்பிகை, பல்வளைநாயகி முதலிய பெயர்களால் வழங்கப்படுகின்றனர். துர்க்கையம்மனுக்குக் கோட்டை வாயில் துர்க்கை என்னும் பெயர் வழங்கப்படுகிறது.

**தீர்த்தம் :**

ஞானவாவி மூன்றாம் பிராகாரத்தில் உள்ளது வைகாசிப்பூரணை யில் நீராடினால் மிக்க புண்ணியம் உண்டாகும். கோடிதீர்த்தம் முதற்பிராகாரத்தில் உள்ள கிணறு. தெப்பக்குளம் முன்கோபுரவாயி லுக்கு அருகில் உள்ளது. காயத்திரிகுளம் கோயிலுக்குக் கிழக்கே உள்ளது; இது விசுவாமித்திரர் உண்டாக்கியது.

**தலமரம்** – வன்னி. ஞானவாவியின் அருகிலுள்ளது.

**தலப்பெருமைகள் :**

முடிகொண்டசோழபுரம் என்று வழங்கிய பழையாறை, சோழ மன்னர்களின் தலைநகர்களில் ஒன்றாக விளங்கியது. பழையாறையைச் சேர்ந்த ஊரே பட்டீச்சரமாகும். மழபாடி என்பதே பண்டைக்காலத் தில் வழங்கிய ஊர்ப்பெயர். காமதேனுவின் புதல்விகள் நால்வர்.

அவர்களில் விமலி வழிபட்ட தலம் பழையாறை. சபளி வழிபட்ட தலம் திருமேற்றளி. நந்தினி வழிபட்ட தலம் முழையூர். பட்டி வழிபட்ட தலம் பட்டீச்சரம்.

மாளுவதேசத்துத் தர்மசர்மா என்ற அந்தணனுக்கு மேதாவி முனிவரின் சாபத்தினல் ஏற்பட்ட நாய் வடிவம் இத்தலத்தில் உள்ள ஞானவாவியின் துளி பட்டதால் நீங்கியது. காம்பீலி நகரத்தரசன் சித்திரசேன மகாராஜா புத்திரகாமேஷ்டியாகம் செய்து புதல்வர்களைப் பெற்றுன். சக்தியும்னன் என்னும் அரசன் ஞானதீர்த்தத்தில் நீராடிய தாலும் கிளியின் பஞ்சாக்ஷர உபதேசத்தாலும் பிரமகத்திதோஷம் நீங்கப்பெற்றுன். விசுவாமித்திர முனிவருக்கு, காயத்திரிமந்திரபலன் கைகூடப்பெற்றதும்பிரம்மரிஷி பட்டம் கிடைக்கப்பெற்றதும் இத்தலத் திலேதான். இராமர் வாலியைக் கொன்றதால் ஏற்பட்ட பழி நீங்குதற் பொருட்டுச் சிவலிங்கப் பிரதிட்டை செய்து வழிபட்டுப் பழிநீங்கப் பெற்றுர். மார்க்கண்டேயர் வழிபட்டு அருள்பெற்ற திருத்தலம்.

**திருஞானசம்பந்தர் முத்துப்பந்தர் பெற்றது :**

திருஞானசம்பந்தர் திருச்செங்குன்றூரிலிருந்து புறப்பட்டுப் பல தலங்களையும் வணங்கிக்கொண்டு திருவலஞ்சுழிக்கு வந்துசேர்ந்தார். அப்போது முதுவேனிற்பருவம் வந்தது. வேனில் வெம்மையைப் பொருட்படுத்தாது அடியார் குழாங்களோடுபுறப்பட்டுப் பழையாறை, சத்திமுற்றம் ஆகிய திருத்தலங்களைவணங்கிக்கொண்டு திருப்பட்டீச் சரத்திற்கு எழுந்தருளினுர். சிவபூதங்கள் வானவீதியில் மறைந்து நின்று முத்தமிழ்விரகர் முடிமீது வெம்மை தீண்டாதபடி முத்துப் பந்தரைத் தாங்கிவந்தன ; பட்டீசர் எம்மை விடுத்து அருள்புரிந்தார் என்று கூறின. அவற்றைக்கண்ட திருஞானசம்பந்தர் இறைவன் திருவருளைஎண்ணி வியந்து வாழ்த்திப்பணிந்தார். வானத்திலிருந்து இறங்கிய முத்துப்பந்தரை அடியார்கள் விரித்துத்தாங்கினர். அவ் வழகிய பந்தரின் நீழலை இறைவன் திருவடி நீழலாகக்கருதி இனிதாகப் பட்டீச்சரத்திற்கு எழுந்தருளிப் " பாடல் மறை " என்று தொடங்கித் திருப்பதிகம் பாடிப்பரவி இன்புற்றுர். முதல்திருப்பாடலில் முத்துப் பந்தர் அருளிய இவ்வற்புத நிகழ்ச்சியைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளார். திருஞானசம்பந்தர் முத்துப்பந்தர்பெற்ற திருவிழா ஆனிமாதம் முதல் தேதியன்று நிகழ்கிறது.

**நந்திவிலகியது:**

திருஞானசம்பந்தர் முத்துப்பந்தரின் நீழலில் இத் தலத்திற்கு எழுந்தருளிவரும் அழகிய காட்சியைக் காணுதற்பொருட்டு இறைவன் நந்திதேவரை விலகியிருக்குமாறு அருள்புரிந்தார். அன்று முதல்

எல்லா நந்திகளும் விலகியுள்ளன. இவ்வாறே திருப்பூந்துருத்தியிலும் நந்தி விலகியுள்ளது அறிதற்குஉரியது. திருப்புன்கூர், நந்தனுருக்காக நந்தி விலகியதலம்.

**புராணங்கள் :**

பட்டீஸ்வரமான்மியம் என்னும் வடமொழிப் புராணத்திலிருந்து மொழிபெயர்க்கப்பெற்ற உரைநடை நூலும், மகாவித்துவான் திரு. மீனுட்சிசுந்தரம் பிள்ளை அவர்கள் பாடிய நிறைவுபெருத தலபுராண மும் உள்ளன

**பட்டியும் தேவியும் வழிபட்டது :**

அம்பிகை இத்தலத்திற்குவந்து ஓர்வனம் அமைத்துத் தவம் செய்தாள். பூதங்கள் மரஞ்செடிகொடிகளாக இருந்து உதவின. காம தேனு தன்புதல்வியாகிய பட்டியைத் தேவியின் தவத்திற்கு உதவு மாறு அனுப்பிற்று. அம்பிகைக்கு இறைவன் சடைமுடிகளோடு காட்சியளித்தருளினர். அதனுல் இறைவனுக்குக் கபர்த்தீஸ்வரர் என்ற பெயர் ஏற்பட்டது. பட்டி இவ்வனத்தின் பெருமையை அறிந்து தானும் பெருமானைப் பூசிக்க விரும்பி மணலினுல் இலிங்கம் அமைத்து நாடோறும் வழிபட்டு வந்தது. இறைவன் பட்டிக்கு அருள்புரிந்தார். அதுமுதல் இத்தலம் பட்டீச்சரம் எனப்பெற்றது. இறைவன் பட்டீச்சரர் என்று வழங்கப்பெற்ருர். அம்பிகை தவம் செய்த காரணத்தினுல் இதற்குத் தேவிவனம் சத்திவனம் என்ற பெயர்களும் உள்ளன.

**இராமர் வழிபட்டது :**

இராவணனைக்கொன்ற பாவம்தீர இராமர் இராமேச்சுரத்தில்இராம நாதரைப் பிரதிஷ்டைசெய்து வழிபட்டார். அயோத்திக்குத் திரும்பும் போது அனுமார் கொண்டுவந்த சிவலிங்கத்தை இத்தலத்தில் பிர திஷ்டைசெய்து தன்வில்லின் முனையினுல் கோடிதீர்த்தம் உண்டாக்கி அபிஷேகம்செய்து வழிபட்டு, பிரமகத்திதோஷம் நீங்கப்பெற்ருர். இராமர் பிரதிஷ்டை செய்த இராமலிங்கமும் அவர் உண்டாக்கிய கோடி தீர்த்தமும் கோயிலில் உள்ளன. மார்கழி அமாவாசையில் இவ்வைதிக விழா கோயிலில் நிகழ்கிறது.

**தர்மசர்மா சாபம் நீங்கப்பெற்றது :**

மாளவதேசத்தில் வாழ்ந்த மேதாவிமுனிவரைத் தாம் செய்யும் யாகத்திற்கு வருமாறு பிரதேசஸ் என்ற முனிவர் அழைத்தார். மேதாவிமுனிவர் தர்மசர்மா என்னும் மாணவனை ஆஸ்ரமத்தையும்-

பசுக்களையும் பாதுகாத்துவருமாறு கூறி யாகத்திற்குச் சென்றார். பல நாட்கள் கழித்துத் திரும்பித் தம் ஆஸ்ரமத்திற்கு வந்த முனிவர் தம்பசுக்கள் நன்கு பாதுகாக்கப் பெருமல் மெலிந்தும் அழகிழந்தும் இருப்பதைக் கண்டார். தர்மசர்மாவை நாயின் உருவம் அடையு மாறு சபித்தார். பிழை பொறுக்குமாறு வேண்டிய தர்மசர்மாவுக்குப் பட்டீச்சரத்தை அடைந்து ஞானவாவிக்கரையில் உள்ள வன்னி மரத்தை வலம்வந்தால் சாபம்நீங்கும் என்ருர். முனிவர் கூறியபடியே தர்மசர்மா பட்டீச்சரத்தை அடைந்தார். ஞானவாவியில் நீராடிய பெரியோர்களின் சடைநீர் தன்மேல் தெறித்தவுடன் தர்மசர்மா நாயுரு நீங்கி, பட்டீச்சரரை வழிபட்டு அருள்பெற்ருர்.

**சித்திரசேனன் வரலாறு :**

காம்பீலி நகரத்தில் வாழ்ந்த சித்திரசேனன் என்னும் அரசன் வேகவதிநதிக்கரையில் வாழ்ந்த முனிவர்களிடம் வேண்டினன். அரிதகமுனிவர் சித்திரசேனன் முற்பிறவிகளிற்செய்த பாவம் தீர ஞானவாவியில் நீராடிப் பட்டீசுவரரை வழிபட்டால் மக்கட்பேறு உண்டாகும் என்று கூறினர். சித்திரசேனன் முனிவர் கூறியவாறே வழிபட்டு மகப்பேற்று வேள்வியைச்செய்தான். இறைவன் அழகிய ஒளி உருவோடுதோன்றி மருந்து ஒன்று வழங்கி மகப்பேறு உண்டாகு மாறு அருள்புரிந்தார். மன்னன் மனைவி அம்மருந்தை உண்டு நன் மக்களைப்பெற்ருள். மன்னன் மிக்க மகிழ்ச்சியடைந்து திருக்கோயில் திருப்பணி திருவிழாக்கள் முதலிய பலவும் புரிந்து மகிழ்ந்தான்.

**சத்தியும்னனும் கிளியும் :**

மதவல்லி என்ற கணிகைப் பெண் பட்டீசரை வழிபட்டுவந்தாள். அவள் வளர்த்த கிளியொன்று சிவநாமங்களையும் தோத்திரங்களையும் இறைவன் சந்நிதியில் சொல்லிவந்தது. மதவல்லி சிவபதம் அடைந் தாள். சத்தியும்னன் என்ற மன்னன் பிரமகத்தி தோஷம் நீங்கக் காசிபமுனிவர் கட்டளைப்படி இத்தலத்தை அடைந்தான். கிளியினல் பஞ்சாக்ஷர உபதேசம் செய்விக்கப்பெற்றுப் பழிநீங்கப்பெற்ருன்.

**கல்வெட்டுக்கள் † :**

இக்கோயிலில் ஐந்து கல்வெட்டுக்கள் இருக்கின்றன. அவற்றுள் இரண்டாம் கோபுரத்தின் உள்பக்கம் இருக்கும் கல்வெட்டு தஞ்சை நாயக்கர் காலத்தில் ஏற்பட்டதாகும். அது அவ்வூரில் திருமணம்

---

† See the Annual reports on South Indian Eqigraphy for the year 1927 Number 257 - 261.

நிகழும்போது தாம்பூலத்தை முதலில் அவ்வூரினர்களாகிய செட்டியார்கள் பட்டுநூல்காரர்கள் இவர்களுள் எவர்களுக்கு முதலில் கொடுப்பது என்ற தகராறு எழுந்தது. முடிவில் இக்கோயிலில் எழுந் தருளியிருக்கும் அம்மனுக்கு ஒரு புடவையையும் வெற்றிலைப் பாக்கையும் முதலில் கொடுத்துவிட்டுப் பின்னர் அவ்விருவகுப்பாரும் எடுத்துக்கொள்வது என்னும் முடிவுபற்றியதாகும். கிரந்தத்தில்உள்ள கல்வெட்டு கோயிலைப் பழுதுபார்த்ததைப்பற்றிக் கூறுகின்றது. அக்கிரந்தத்திலுள்ள இரண்டு செய்யுட்கள், புனித இடங்களாகிய விருத்தாசலம், கமலாலயம், வெண்காடு, சாய்க்காடு, கைலாசம் இவைகளைப்போல் பட்டீச்சரமும் ஒன்று என்று குறிப்பிடுகின்றன. வெளிப்பிராகாரத்தில் ஸ்ரீபலிபீடத்தின் அடிப்பகுதியிலுள்ளகல்வெட்டு திருஞானசம்பந்தர் மடம், திருநாவுக்கரசு மடம், திருமூலதேவர் திருமடம் இவைகளைப்பற்றிக் குறிப்பிடுகின்றது.

---

# அன்னை அருள்மாலை

—★—

திருமுறைக் கலாநிதி

**வேளூர், திரு. க. சொக்கலிங்க ஓதுவார்.**

அன்னமா ரும்வயல் சூழ்திரு நன்னிலம்
ஆளுமது வனநாயகி
அண்டர்பணி யுந்திருக் கொண்டீச் சுரம்அமர்ந்
தருளும் சாந்தநாயகி
செந்நெலார் திருப்பனை யூர்பெரிய நாயகி
சென்றுசேர் திருவிற்குடி
செஞ்சொலாள் ஏலவார் குழலிதிருப் புகலூர்த்
திருக்கருந் தார்குழலியே
புன்னைமலர்ப் புகலூர் வர்த்தமா னீச்சுரம்
புகழ்கருந் தார்குழலியே
புண்ணியர் போற்றும் இராமன தீச்சுரம்
புகழ்கரு வார்குழலியே
பன்னுக மணிபரமன் பங்கிலுறை செல்வியே
பண்ணிலுறு பெண்ணமுதமே
பஞ்சின்மெல் லடியிணையைத் தஞ்சம்அடைந் தென்றும்
பணிவேற்கருள் அன்னையே. (17)

# பக்தி நெறி

'சித்தாந்தப் புலவர் மணி'

## திரு. ந. ரா. முருகவேள் M, A., M. O. L.

**முன்னுரை :**

மனிதன் பலவகை உணர்ச்சிகளின் நிலைக்களமாகத் திகழ்பவன். கடலில் மாறிமாறி எழும் அலைகள் எண்ணற்றனவாதல் போல, மனித மனத்தில் உருத்தெழுந்து வீசும் உணர்ச்சிகளாகிய அலைகளுக்கு ஓர் அளவே இல்லை.

"கடலின் திரையது போல்வரு கலக்க மலம்அறுத்து என்
உடலும் உயிரும் புகுந்து ஒழியாவண்ணம் நிறைந்தான்......"

என்று இறைவனைப் பாடிப் பரவுகின்றார் மணிவாசகர். இங்ஙனம் மனித மனக்கடலில் எழும் உணர்ச்சியலைகள் அளவில் அடங்கா வாயினும், உளவியல் நூலார் அவற்றுள் சிலவற்றை மிகவும் முதன்மையானவையான உந்துதல்கள் அல்லது இயல்பூக்கங்கள் (Instincts) எனச் சிறந்தெடுத்துக் குறிப்பிடுவர். உணவு தேடல், சேர்ந்து வாழ்தல், காதல் புரிதல், மகவு வளர்த்தல், தற்காத்துக் கோடல், வேண்டுவன திரட்டுதல் முதலிய எத்தனையோ பல இயல்பூக்கங்கள், பொதுவாக எல்லா உயிர்கள்மாட்டும் இயல்பாக அமைந்து விளங்குகின்றன. அவைகளுள் மனிதர்களுக்கே சிறப்பாக உரிய இயல்பூக்கங்கள் சில உண்டு. அவைகளுள் தலையாய ஒன்று பக்தி (Religions Instinct) என்பது. மனிதனை மனிதனுக்கி, வையத்து வாழ்வாங்கு வாழ வைத்து, அவனை வானுறையும் தெய்வத்துள் சேர்த்து வைக்க உதவுவது பக்தியே எனலாம்.

" முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல்வேனைப்
**பத்திநெறி** அறிவித்துப் பழவினைகள் பாறும்வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்டான் ".

என மணிவாசகர் பாடுதலால், பக்தி நெறியின் சிறப்பினை யாவரும் இனிது அறியலாம். பாகவத புராணம், நாரத பக்தி சூத்திரம் முதலிய நூல்கள், பக்தியினைப் பின்வருமாறு ஒன்பது வகைப்படுத்தி விளக்கிக் கூறுகின்றன. அவைகள் கீழ்வருமாறு:—

1. யாதனம் : கோயில்கள் எடுப்பித்தல், திருநந்தவனம் அமைத்தல் முதலிய திருப்பணிகள் செய்தல்.
2. சிரவணம் : இறைவனின் வரலாறும்பெருமையும்பற்றிக் கூறும் நூல்களைத் தக்கவர்கள் சொல்லக்கேட்டுமகிழ்தல்.
3. கீர்த்தனம் : இறைவனின் திருநாமங்களை உச்சரித்தல், இசையுடன் பாடல்களைப் பாடிப் பணிதல்
4. அர்ச்சனம் : நீராட்டிப் பூச்சூட்டி நிவேதனம் படைத்துப் பூசித்துப் போற்றுதல்.
5. ஸ்துதி : இறைவனைப் புகழ்ந்து தோத்திரப் பாடல்களை இயற்றுதல் அல்லது தனித்தோ பலருடன் சேர்ந்தோ பாடுதல்.
6. வசனம் : இறைவனின் அருட் பெருமைகளை எடுத்துப் பலருக்கும் கூறி விளக்குதல்.
7. வந்தனம் : இறைவனை எட்டுறுப்பு, ஆறுறுப்பு, ஐந்துறுப்பு முதலிய வகைகளிற் பணிந்து வணங்குதல்.
8. ஸ்மரணம் : இறைவனை எப்பொழுதும் மறவாமல் நினைத்துக் கொண்டே இருத்தல்.
9. தியானம் : சுகாசனம் முதலிய நிலைகளில் அமர்ந்து, மனத்தை ஒருமுகப்படுத்தி, அன்பு செலுத்தி, இறைவனை நினைந்து வழிபடுதல்.

பக்தியுணர்வு என்பது, சிறப்பாகக் கடவுளை நோக்கியே நிகழ்வதாகக் கொள்ளப்படினும் கடவுளுண்மையை மறுப்பவர்கள்மாட்டும் "உறவேல் ஒழிக்க ஒழியாது" என்று ஆண்டாள் அருளிச்செய்தவாறு போல, அஃது அழியாமல் அமைந்தே இருக்கும். ஏனெனில் கடவுளுண்மையை மறுப்பவர்களும்கூடக் கடவுளின் இயல்பாகப் போற்றப்பெறும் **அன்பு அறிவு இரக்கம் நீதி தியாகம்** முதலிய குணங்களை யுடையவர்களாயும் போற்றுபவர்களாயும் விளங்குகின்றனர். அவர்கள்மாட்டும் நாட்டுப்பற்று - மொழிப்பற்று - குறிக்கோட்பற்று என்பன உள்ளன. அவற்றிற்காகத் தொண்டாற்றல், உயிர் அளித்தல் முதலிய சிறந்த பல பண்பும், செயலும் நிகழ்வதற்குக் காரணமாக அமைவது, பக்தியுணர்ச்சியேயாகும்.

இப்பண்பு நலங்களை வெறுத்து மறுத்துரைக்க வல்லவர்களே, இறைமறுப்பாளர்கள் ஆவர். † அத்தகையோர் எவரும் இவ்வுலகில்

---

† "He alone is the atheist to whom the predicates of the Divine being, e.g., Love Jwisdom ustice, Sacrifice are nothing"

— Feuerbach, Essence of Christianity P 21.

இரார். அதுபற்றியே "மனிதன், தீர்க்க இயலாத வகையில் பக்தியுணர்ச்சி (நோய்) உள்ளவனாகவே இருக்கின்றான். "Man is incurably religious") என அறிஞர் ஒருவர் (Prob. J. B. Pratt) குறிப்பிடுகின்றார். புத்தர்பெருமான் இறைவனைப்பற்றித் தெளிவாக ஏதும் கூறிற்றிலராயினும், மக்கள் அவரையே இறை நிலையில் வைத்துப் போற்றத் தலைப்பட்டமை, இவ்வுண்மையினையே வலியுறுத்தும் *.

எனவே, மனித குலத்தினரால் அன்பு அறிவு இரக்கம் நீதி தியாகம் — 'தமக்கென முயலா நோன்றாட் பிறர்க்கென முயலும் பெற்றிமை' முதலிய உயரிய பண்பு நலங்கள் போற்றப்படும் வகையில் பக்தி நெறியும் உணர்ச்சியும் இவ்வுலகில் அழியாமல் நிலைபெற்று வளர்ந்தோங்கியே வரும் எனலாம். அத்தகைய சிறந்த அருமை மிக்க இனிய பக்தி நெறியினைக் கடைப்பிடித்து ஒழுகி, நாம் அனைவரும் உய்ய முயல்வோமாக!

---

* "The religious instinct of man reqvires a god, and so in the practical religion of Buddha he himself was dified, in spite of his own caution".

— Dr. S. Radhakrishnan.

---

# சிவஞானசித்தியார் தெளிபொருள் விளக்கம்

தருமையாதீனப்புலவர், சித்தாந்தக்கலைமணி.

திரு. சி. அருணைவடிவேல் முதலியார்

(மலர் 35, இதழ் 10, பக்கம் 423 - ன் தொடர்ச்சி)

**புத்தனவன் அறக்கெட்டுப் போனன் என்று**
**போற்றுவதிங் காரை நீ? பொய்த்தவம்செய் புத்தா!**
**'செத்தவர்க்குச் சிலகிரியை செய்ய' இங்குச்**
**செய்தவர்க்கும் புண்ணியமாம்' என்று செப்பின்,**
**நித்தம் உயிர் ஆதலால் பலிக்கும் செய்தி;**
**நினைந்துதரு வானும்உளன்; உனக்கிவ்வா றில்லை;**
**வைத்தசுடர்த் தீபம்அற மாய்ந்தக்கால் அதற்கு**
**மருவுதிரி நெய்கூட்டும் மதிகேடுன் வழக்கே. 105**

## இதன் தெளிபொருள்

புத்தனே, நீ உனக்கு முன் இருந்த புத்தன் 'முத்தியடைந்து விட்டான்' என்றும், 'முத்தியாவது பஞ்ச கந்தமும் அறக்கெடுகை' என்றும், 'பஞ்சகந்தம் அறக் கெடாது, சந்தானமாய்த் தோன்றி வருதலே உடலும் உயிருமாய்க் காணப்படும் பிறப்பு' என்றும் கூறுவை. அதனல் உடம்பே யன்றி, உயிரும் அறக்கெட் டொழிதலே நீ கூறும் முத்தியாதலால், 'ஆதி புத்தன் முக்தியடைந்தார்' என்றால், 'அறக்கெட்டொழிந்தான்' என்பதுதானே பொருள்! 'ஆதி புத்தன் அறவே கெட்டொழிந்தபின் நீ 'புத்தன்' என்று பல வகையிலும் அவனை வழிபடுதலால் பயன் யாது?

**'செத்தவர்களுக்குச் சில கிரியைகளை இங்கு உள்ளவர்கள் செய் தால், அங்ஙனம் செய்ததனல் செய்தவர்கட்குப் புண்ணியம் உண்டாதல் போல, புத்தன் அறக்கெட்டுப் போனலும் அவனை வழிபடுவார்க்குப் பயன் உண்டாகும் என்று நீ கூறினல், 'செத்த வர்க்குப் புண்ணியம் உண்டாகும்' என்பது வேதமதக்கொள்கையே யல்லது உனது மதக்கொள்கையன்று. ஏனெனில், 'உயிர் என்றும்**

அழியாத நித்தப்பொருள்' என்பது வேதமதக் கொள்கையாதலாலும் 'புண்ணியம் பாவம்' என்பன பிற உயிர்கட்கு இன்பத் துன்பங்களை உண்டாக்கும் செயல்களால் வருவனவே என்பது உனக்கும் உடன்பா டாதலின் அதன்படி, 'செத்தார்' எனப்படுவோரும் இங்குக் காணப் படாது வேறுநிலையில் உள்ளனரேயன்றி இல்லாதொழியவில்லை என்பது வேத மதக் கொள்கையே. அதனுல், செத்தாரை நோக்கிச் செய்யும் செயல்களும் பயனுடைய செயலாதல் வேத மதத்தவர்க்கே.

மேலும், யாவர் செய்யும் செயலையும் அவற்றினது நன்மை தீமை களை அறிந்து அவற்றிற்கு ஏற்ற பயனை அவரவருக்கு இறைவன் கூட்டுவிக்கின்றுனே அல்லது, அந்தச் செயல்களே செய்தவர்கட்குத் தம்பயனைத் 'தரவில்லை' என்பதும் வேத மதக்கொள்கையே. அந்தக் கொள்கையும் உன் மதத்தில் இல்லை. ஆகவே, புத்தனை வழிபடு தற்குச் செத்தார்க்குச் செய்யும் கிரியை எடுத்துக்காட்டுதல் உனக்குத் தோல்வியேயாம். ஆகவே, நீ புத்தனை வழிபடுதலாகிய தவம் பொருளற்றது ஆகலின் அது பொய்த்தவமேயாம். அன்றியும் தொல்லாசிரியரை வழிபடும் வேத மதத்தினர் நீ அங்ஙனம் வழி படாமைபற்றி இகழ்தற்கு அஞ்சிச் செய்யும் வகையிலும் உன் தவம் பொய்த்தவம் ஆகின்றது.

அது நிற்க, நலம் தீங்குகளில் ஒன்றையும் அறிதலின்றி அறக் கெட்டுப் போனவனுக்கு நல்ல வழிபாடுகளைச் செய்கின்ற நீ நெய்யை யும், திரியையும் உண்டு ஓங்கி எரிகின்ற சுடர் அணைந்துபோன பின்பு அந்த விளக்கிற்கு நெய்யும், திரியும் கூட்டுபவனுகின்றுய். இம்முறைமை அறிவொடு கூடாத முறைமையன்றே!

## விளக்கம்

"என்று போற்றுவது இங்கு ஆரை", "பொய்த்தவம் செய் புத்தர்" என்பவற்றிற்குக் கருத்துநோக்கி இவ்வாறு உரைக்கப் பட்டது. "என்று" என்றது, "என்று சொல்லிய பின்" என்றவாறு.

"உனக்கு" என்றது, **இசை எச்சத்தால்** 'வேதாகமங்களைக் கொள்ளாது இகழ்கின்ற உனக்கு' எனப் பொருள் தந்தது. "உனக்கு இவ்வாறில்லை" என்றதனுல், 'வேதாகமங்களைக்கொண்ட எங்கட்கே இவ்வாறுள்ளது' என்பது போந்தது.

இதனுல், வழிபாட்டினை விரும்பாத பௌத்த மதத்தவர் அதனைப் போலியாகச் செய்தல், கூறப்பட்டது. (11)

**'நூலுரைத்தான் ஒருவன்உளன் என்றனுமா னத்தால்**
**நூல்கொண்டிங் கறிந்தாற்போல் நூலா நூலின்**
**பாலுரைத்த பொருளெல்லாம் அனுமானம்' என்னில்**
**பரலோக பாதாள லோகங்கள் ஒருசொல்**

காலுரைத்த நூலின்றி அறையாய்; இன்றேல்
அவையறிந்த படிஎன் ? உன தனுமான மன்றே
மேலுரைக்கும் பிரமாணம் உனக்கில்லை; காட்சி
அனுமானம் விட்டபொருள் விளக்குவதா கமமே. 106

## இதன் தெளிபொருள்

'ஒரு நூலைக் கண்டவன் அந்நூலைச் செய்த ஆசிரியனைக் காணு விடினும் அந்நூலையே ஏதுவாகக்கொண்டு 'அதனைச் செய்தான் ஒருவன் உளன்' என்று அனுமானத்தானே அறிதல் கூடுமாகலின் 'அவ்வாசிரியன் இன்னான்' என அறிவிக்கும் பாயிரம் முதலியன அவ்வனுமானத்தின்கண்ணே அடங்குவனவன்றி, வேறு பிரமாண மாகா. அதுபோல முதல் நூல்களிற் சொல்லப்பட்ட பொருள்களும் நுண்ணர்வுடையாரால் பிற ஏதுக்களைக்கொண்டு உணரப்படுவனவே யாதலின் நூல்களும் அனுமானத்தின் அடங்குவனவே; ஆகமப் பிரமாணம் அல்லது உரையளவை வேறு பிரமாணமன்று என்று புத்தா, நீ கூறினால்,

'காணப்பட்ட இவ்வுலகத்திற்கு மேலிடத்திலும், கீழிடத்திலும் வேறு வேறு உலகங்கள் உள்ளன' என்று நீ கொண்ட உலகங்கள் 'உள்ளன' என்பதை அவை பற்றிக்கூறும் நூலைப் பற்றாது வேறு ஏதுக்களால் நீ மெய்ப்பித்துச் சொல்ல வல்லையாயின் சொல். அங்ஙனம் சொல்லவல்லையல்லை என்பதை நீ உணர்கின்றாய் ஆதலின் 'அவைபோலும் பொருள்களை உணர்தல் நீ கூறும் அனுமானத்தா லன்று; யாம் கூறும் ஆகமத்தாலே' என்பதையும் 'அதனால் ஆகமப் பிரமாணம் அனுமானத்துள் அடங்காது; வேறே' என்பதை யும் உடன்பட்டுக்கொள். அங்ஙனம் நீ கொள்ளமாட்டாய் ஆதலின் நீ சில நூல்களை 'ஆகமம்' உயர்த்துக்கூறி, அவைபற்றிச் சில பொருள்களை நாட்ட முயலுதல் பொருந்தாச் செயலாம். ஆயினும் உண்மை யாதெனின், '**ஆகமப் பிரமாணம்**' அல்லது '**உரையளவை**' என்பது, '**காட்சி அனுமானம்**' என்னும்அளவைகளால் அறியவாராத பொருள்களை மாணுக்கர்க்கு அறிவிக்கும் சீரிய ஒரு தனிப்பிரமாணம் என்பதே.

## விளக்கம்

நூலா நூல், 'பஞ்சினால் நூற்கப்படாத நூல்' எனக் கல்வி நூற்கு வெளிப்படை. இனி, 'நூலாம் நூல்' எனப் பிரித்துத் தனி முதலாய் நிற்கின்ற இறைவன் நூல் எனவும் உரைப்பர். ஒரு சொல் - ஒப்பற்ற சொல், முழுதுணர்வுடையோனலன்றிப் பிறர் ஒருவராலும் சொல்ல இயலாத சொல். 'இன்றாக' என்பது 'இன்றி' எனத்

திரிந்தது. மேல் உரைக்கும் - காட்சி கருதல்களுக்குமேலே சொல்லப் படும். "உனக்கு இல்லை" என்றது, 'நீயும் எம்மைப் போலச் சில வற்றை நூற் பிரமாணம்பற்றிக் கூறுதல் உனக்கே முரணும்' என்றபடி. எனவே, 'நீ உனது நூலான் அறிந்தவற்றையும் எமக்கு அனுமானத் தில் வைத்தே காட்டல் வேண்டும்' என்பதாம்.

இதனால், புத்த மதத்தவர், 'பிரத்தியட்சம், அனுமானம் எனப் பிரமாணம் இரண்டே; ஆகமம் என ஒன்று கூறல் வேண்டா' என்றல் மறுக்கப்பட்டது. பௌத்தர், 'பிரமாணம் இரண்டே' என்றல்,

"மருவிய அளவை காட்சி மானமென் றிரண்டே"

என மேல் இம்மதம் கூறுமிடத்தில் கூறப்பட்டது.

**எப்பொருளும் அநித்தம்என இயம்பிடுவை; அநித்தம்**
**இல்லதற்கோ, உள்ளதற்கோ, உளதிலதா னதற்கோ?**
**செப்பிடின்இல் லதற்கில்ல தென்று மில்லை;**
**சென்றடைவ துள்ளதேல், உள்ளதென்றும் உண்டாம்;**
**அப்படித்தான் உளதிலதாம் அப்பொருளுக் கென்னில்,**
**உளதிலதா கா(து) இலதும் உள்ள தாகா(து);**
**இப்பொருள்தான் அநித்தம்இலை என்றொன்றைக் காட்டாய்**
**எனில்தோன்றும் பொருள்நின்றிங் கிறுதி யாமே.** 107

## இதன் தெளிபொருள்

புத்தனே, 'நீ எப்பொருளும் நிலையுடையதன்று; எல்லாப்பொருள் களும் ஒரு கணத்தில் தோன்றி மறு கணத்தில் அழிந்தொழிவனவே' என்று சொல்வாய். ஒரே நிலையில் நில்லாது, தோன்றுதலும் அழிதலும் ஆகிய நிலையாமை குடம், ஆடை முதலியனபோலும் உள் பொருட்கோ, முயற்கோடு, ஆகாயத்தாமரை போலும் இல்பொருட்கோ, உள்ளதும் இல்லதும் அல்லாத சூனியப் பொருளுக்கோ உள்ளது? 'இல் பொருட்கே நிலையாமை உள்ளது' என நீ கூறினால், முயற்கோடு முதலியனபோலும் இல்பொருள்கள் முக்காலத்தும் இல்லனவே யாத லின், அவை ஒருகாலத்தில் தோன்றி மற்றொருகாலத்தில் அழியும் என்றல் பொருந்தாக் கூற்றாகும். அதுபற்றி, 'உள்பொருட்கே நிலை யாமை உள்ளது' என நீ கூறுவையாயின், உள்ளது என்றும் உள்ளதேயாதலின், அதனைக் 'கெடும்' என்று கூறல் பொருந்தாது. இனி வேறு கூற வழிஇல்லாமை பற்றி, 'உள்ளதும் இல்லதும் அல்லாத பொருட்கே நிலையாமை உள்ளது' என்று கூற முற்படுவை யாயின், ஒரு பொருளை 'உள்ளதன்று' எனக்கூறின், 'அஃது இல்லை' என்பதே கருத்தாகும். அவ்வாறே ஒரு பொருளை 'இல்லதன்று'

எனக் கூறின், 'அஃது உள்ளது' என்பதே கருத்தாகும். ஆகவே, உள்ளதும் இல்லதும் அல்லாது மூன்றுவதாக ஒரு பொருள் இல்லை யாதலின், அவ்வாறு ஒரு பொருள் இருப்பதாகக் கூறி மேற்கண்ட தடைகளை விடுக்க முயலுதல் வெறுஞ் சொற்சாலமே யன்றிப் பொருள் படுவதன்று. அதனுல் 'தோன்றி யழிதலாகிய நிலையாமை உடையது இப்பொருள்' என்று கூறமாட்டாமையால், 'எப்பொருளும் அநித்தம்' என்னும் உனதுவாதம் நிலைபெருதொழிகின்றது. 'அங்ஙனமாயின் - அநித்தம் இன்றி நித்தமாய் உள்ளபொருள் இது-என ஒன்றை நீவிர் காட்டீர்' என நீ கூறினுல், உள்ளதாய ஒருபொருளே தோன்றிப் பின் நின்று பின் அழிகின்றது. தோன்றி யழிதல்பற்றி 'அநித்தம்' எனப்படினும் உள்ளது என்றும் உள்ளதேயாதலால் நித்தமேயாம்.

## விளக்கம்

இறுதியில் விரித்துரைத்தது குறிப்பெச்சம். இதனுல், 'எப் பொருளும் கணத்தில் தோன்றிக் கணத்தில் அழிதலால், யாவும் சூனியமே யன்றி, உள்ளது யாதொன்று மில்லை' என்னும் அவர் கூற்று மறுக்கப்பட்டது.

'எப்பொருளும் அநித்தமாதலின் சூனியமே' என்றல் அவர் மதம் என்பது, மேல், "தோற்றிய பொருள்கள் எல்லாம்" என்னும் செய்யுளில் கூறப்பட்டது.

(தொடரும்)

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

### Dharmapuram Adhinam

**Sri Panchanatheeswaraswamy Devasthanam, Thiruvaiyaru.**

The temples are a masterpiece of art, and all that is great in Hindu religious architecture. The temple and its premises are so neat and tidy, that you feel the presence of God. The devotees and the trustees deserve all congratulations.

(Sd.) R. M. Vasanth Kumar.

11—10—78. Dy. I. G. of Police, Karnataka.

தேவிபாகவதம் :

# " கண்டவர் விண்டிலர் விண்டவர் கண்டிலர் "

புலவர். திரு. கா. ம. கண்ணப்பன்

கோசலநாடு......,

அங்கே வேத ஒலியும் வேள்வி நலமும் சிறந்ததோர் வீடு!

பகலானாலும் சரி; இரவானாலும் சரி; எப்போதும் ஏக்கத்தோடு விளங்கினார் தேவதத்தர். இன்று நேற்றுத் தோன்றிய வருத்தமா இது? பல ஆண்டுகளாகவே பழகிப்போன வருத்தந்தான்!

விபூதி தரித்த மேனி! நெற்றியிலே குங்குமம்! நல்ல அந்தணக் கோலம். சந்தியா வந்தனத்தை முடித்துவிட்டுச் சற்றே ஊஞ்சலில் அமர்ந்தார் தேவதத்தர்.

ஊஞ்சல் அசைந்தது. உள்ளமும் அசைந்தது.

'ஏன்? இந்த முயற்சி செய்து பார்த்தால் என்ன? உள்ளத்தை உசுப்பிக்கொண்டே சாஸ்திர சர்ச்சையில் மனத்தை ஊன்றினார் தேவதத்தர். சுவடிகளைப் புரட்டினார்! 'இதோ, இந்த ஏடுதான் என் ஏக்கத்தைப் போக்கப்போகிறது' - முடிவு எடுத்தவாறே முன்னேற்பாடுகளைச் செய்யத்தொடங்கிவிட்டார்.

" தர்ம பத்தினி! நம் கவலை தீர்ந்துவிட்டது; பிள்ளை இல்லையே என்ற ஏக்கம் இனி நமக்குத் தேவையில்லை! புத்திர காமேஷ்டி யாகம் செய்தால் போதும்! புத்திர பாக்கியம் ஏற்பட்டுவிடும்.

தேவதத்தர் அறிக்கை கொடுத்துவிட்டார், அன்பு மனைவியிடம்.

  

தமசா நதிக்கரை ... ... ...

இயற்கை எழில் கொஞ்சும் இனிய பகுதி; தெய்விக மணம் கமழும் சிறந்த இடம்.

இந்த இடத்தைத்தான் புத்திர காமேஷ்டியாகம் செய்வதற்காகத் தேர்ந்தெடுத்தார் தேவதத்தர். ஏற்பாடுகள் எல்லாம் செய்யப்பட்டு

விட்டன. நான்மறை வல்ல நல்லோர், முத்தீ ஓம்பும் முனிவர் ஆகியோர் அங்குக் கூடிவிட்டனர்.

தொடங்கிற்று ;வேள்வி ; வேத முழக்கம் ! ஆகுதிப்புகை ! நறுமணச் சூழல் !

தேவதத்தர் உள்ளம் ஒன்றிப்போஞர். இனிய சாமகீதம் அவர் இதய நார்களை இணைத்துக்கொண்டிருந்தது !

ஆண்டவனே சொக்கிப்போகும் சாமகீதத்தில் தேவதத்தர் மயங்கி நிற்பதில் வியப்பொன்றும் இல்லை. சற்று நேரமே நிலைத்தது அந்த மகிழ்ச்சி.

திடீரென, தேவதத்தர் முகத்திலே சாந்தம் மறைந்தது; கோபம் நிறைந்தது.

"கோபிலரே" ... ... கோபிலர் - இவர்தான் சாமகீதம் பாடும் பெரியவர்.

"கோபிலரே ! உம்மைத்தான்......... தேவதத்தர் இடிக்குரல் மெய்ம்மறந்து பாடிக்கொண்டிருந்த கோபிலரைக் குலுக்கியது.

"வேண்டி வேண்டிச் செய்கிற இந்த வேள்வியில் ஸ்வரஹீன மாகப் பாடுவது நன்ருயிருக்கிறதா? இதுதான் நீர் கற்ற அழகோ ? சுவாசத்தை வேறு 'உஸ்' என்று விடுகிறீர் ! அமங்கலமாகப் பாடுகிறீரே ! சுத்த மூடத்தனமாக இருக்கிறது உங்கள் செயல்" - தேவதத்தர் கோபத்தால் கொடுமொழிகளைக் கொட்டி விட்டார்.

அருமறை வல்ல முனிவர்களிடம் ஆத்திரம்கொண்டு ஆகாத சொல் கூறுவது அழகா? - தேவதத்தர் ஆத்திரம் அவர் அறிவை அழித்துவிட்டது.

"மூச்சு விடுவதில் எச்சரிக்கையாக, சாமகீதம் இசைக்க வேண்டும்; ஸ்வரபங்கம் கூடாது ! இது முறை என்பது எனக்குத் தெரியும் தேவதத்தரே ! தளர்ந்துபோன உடலில் தவறி வந்து விட்டது மூச்சு ! ஸ்வரம் பங்கப்பட்டுவிட்டது ; இதற்காக என்னிடம் ஆத்திரப்படுகிருயே" - இப்படிச் சாதாரணமாகத்தான் கூறத் தொடங்கிஞர் கோபிலர்.

கொஞ்சம் கூட எண்ணிப்பார்க்காமல் என்னை மூடன் என்று சொல்லி விட்டாயே" - மேலே பேச நா எழவில்லை கோபிலருக்கு.

தேவதத்தர் விதி கோபிலரை மேலும் பேசவைத்தது !

"என்னை மூடன் என்ற உனக்கு, இந்த யாகத்தின் பயனுய்ப் பிறக்கப் போகிற மகன் மூடனுகவும் முரடனுகவும் ஊமையாகவும் இருப்பான்".

கோபிலர் கொட்டித் தீர்த்தார்!

தேவதத்தரை விதி ஆட்டத்தொடங்கிவிட்டது!

'புத்திரன் இல்லையே' என்ற கவலையில் இருந்த தேவதத்தருக்குப் பிறக்கப்போகும் குழந்தையைப் பற்றிய புதிய கவலை முளைத்தது.

பெரிய பாவம் செய்து விட்டோமே என்றபயம் அவர்உள்ளத்தை உலுக்கியது; பெரியவரைத் தவருகப் பேசினேமே என்ற எண்ணம் அவர் இதயத்தைத் துளைபோட்டுக்கொண்டிருந்தது. மனத்தைத் திடப்படுத்தியவாறே, சாபவிமோசனம் பெறத்துடித்தார் தேவதத்தர். வேதம் வல்ல பண்டிதர் அல்லவா அவர்!

தான் செய்த பிழையை மன்னிக்குமாறு கோபிலரிடம் மிகவும் பணிந்து, பலவாறு வேண்டிக்கொண்டார்.

கோபிலர் மனம் இரங்கினுர்! மன்னிப்பு வழங்கினுர்; சிறிய மாற்றத்தோடு......

"உனக்குப் பிறக்க இருக்கும் புத்திரன் என் சாபத்தின்படி மூடனுகத்தான் பிறப்பான்; ஆனுல் அவன் பின்னர் பெரிய பண்டிதனுக ஆவான்".

இந்த விமோசன வாக்கியம் தேவதத்தருக்குப் புளகாங்கிதத்தை உண்டுபண்ணிற்று; ஆம் அவர் மெய்சிலிர்த்துப் போனுர்.

புத்திர காமேஷ்டி யாகம் புனிதமாக நிறைவுற்றது.

★ ★ ★

ரோகிணி.........

தேவதத்தர் தர்மபத்தினியின் பெயர்; அவர் செய்த யாகத்தின் பயனுய்ப் பிறந்த அருமைச் செல்வனின் நட்சத்திரமும் அதுதான்!

தேவதத்தரின் புதல்வன் பெயர் உதத்தியன். உரிய முறையில் பெயர் சூட்டப்பட்டான்.

எட்டாம் ஆண்டில் உபநயனம் செய்வித்தார்; சந்தியாவந்தன மந்திரங்களைக் கற்பிக்க முயன்ருர்; வேத மந்திரங்களை அத்யயனம் செய்விக்க முயன்ருர்; பயன் இல்லை! சாபத்தாலே மூடன்! முயற்சியாலா மாற்ற முடியும்? ஒன்றும் ஏற வில்லை!

தந்தையின் கடமையாயிற்றே வித்தை கற்பிப்பது; மடமைதான் குறுக்கே நிற்கிறதே! சாபந்தான் சங்கீதம் பாடிக்கொண்டிருக்கிறதே.

மூடப் பிள்ளையைப் பார்த்துத் தெருவினர் நகைத்தார்கள்; ஊரார் 'உதவாக்கரை' என்ருர்கள். பல ஆண்டுகளும் ஏச்சுக்கும் பேச்சுக்கும் நாயகன் ஆனுன் உதத்தியன்.

'எல்லாரும் ஏசிட பலபேரும் பேசிட இங்கே வாழ்வதை விட இந்த இடத்தை விட்டுப் போய்விடுவதே நல்லது'

— இது தேவதத்தர் குரலா? இல்லை! அன்னை ரோகிணியின் வேண்டுகோளா? அதுவுமில்லை!

உதத்தியன் தனக்குத்தானே எடுத்துக்கொண்ட முடிவு இது.

போக முடிவு எடுத்ததோடு நிற்கவில்லை உதத்தியன். தனக்கு என்று சில நியதிகளையும் ஏற்படுத்திக்கொண்டான். அவன் மூடன் ஆனாலும் யாகத்தால் பிறந்தவனல்லவா?

"இனி நான் கங்கைக்கரைக் காட்டில் வாழ்வேன்;
காய் கனிகளையே புசிப்பேன்;
உண்மையே கூறுவேன்"

நியதி வகுத்துக்கொண்டவன், நிலைமாறாமல் வாழத் தொடங்கினான்! மனம்தானே மனிதனை நடத்திச்செல்கிறது!

  

உதத்தியன் உண்மையே பேசினான், விளங்காத சொற்களால்! கொச்சை உச்சரிப்பு - கோணிப்போன வார்த்தைகள்! உதடுகள் அசையும் - உருவம் மாறிய சொல்லோசைதான் வெளிவரும்! உள்ளத்தால் உண்மை எண்ணினான்: வாக்கினால் வாய்மை பேசினான்; செய்கையால் மெய்ம்மை செய்தான் - இவை அவன் தனிச் சிறப்புகள்!

ஊராரால், உலகினரால், ஏன்? அவன் கொண்ட விரதத்தால் உதத்தியன் 'சத்தியதபன்' ஆனான்; அவன் சத்தியத்தைத்தானே தவமாகக்கொண்டிருப்பவன்.

காட்டிலே வாழ்ந்துவந்த அந்தப் பதினான்கு ஆண்டுக் காலமும் சத்தியதவமே செய்தான்.

  

சத்தியதபன் அமர்ந்திருக்கிறான்! அவன் எதிரே..................

உடலெல்லாம் அம்புக்காயங்கள்! உதிரமோ கொட்டுகிறது! சாவை எண்ணிச் சஞ்சலித்து மிரளும் விழிகள்! - காற்றைப்போல் கருகிவந்தது ஒரு காட்டுப்பன்றி.

'யாரோ, வேடன் ஒருவன் இதன்மேல் குறிவைத்திருக்கவேண்டும்' - இப்படிச் சிந்திக்கிற கணநேரத்திற்குள்ளேயே ஒரு புதரில் மறையத்தொடங்குகிறது பன்றி.

சத்தியதபன் மிக வேகமாக எழுந்து பன்றியைநோக்கி ஓடிச் சென்றான்; கண்டான்.

மனம் தாளவில்லை அவனுக்கு! உதடுகள் துடித்தன; பேச இயலாதவனுயிற்றே அவன்! கூச்சலிட முயன்ருன்! கூடாதவனு யிற்றே அவன்!

"ஹ்ரு...... ஹ்ரு"

—ஒரே கூச்சல்! அவனை மீறிவந்த அந்த ஓசை அண்ட வெளியை அதிரச்செய்தது!

சாதாரண ஓசையா அது? பீஜாட்சர ஓசை! அளக்கலாகாப் பெருமையுடையது அந்த நாதம்! அன்னையின் அருள்கீதம்!

அவன் கூச்சலிட்ட அந்த ஒலியே அவனுக்கு மெய்யறிவை ஊட்டிவிட்டது! இதுவும் எதிர்பாராததுதான். மூடநிலைமை ஒழிந் தது! முன்னிருந்தநிலை நீங்கியது! அக்கணமே அன்னை அருளை நினைந்து வணங்கினுன்.

தன்னிலை மறந்த சத்தியதபன் அங்கேயே தர்ப்பாசனத்தில் தவத்திற்கு அமர்ந்தான்.

  

"அந்தணரே!" .........

— குரல்கேட்டுத் திரும்பினுர் தேவி அருளால் சாப விமோசனம் பெற்ற சத்தியதபர்.

"உம்மை எனக்கு நன்ருகத் தெரியும்; நீர் உண்மையை விரத மாகக் கொண்டவர்"

"அது இறைவி அருள்! உனக்கு என்னவேண்டும் என்பதைச் சொல்" - சரளமாகப் பேசவந்த சத்தியதபர் எதிரிலிருக்கும் வேடனை இப்படிக்கேட்டார்.

"முனிவரே! நானே வேடன்; என் குடும்பத்தில் எல்லாரும் பட்டினி; கொலைத்தொழில் என் குலத்தொழில்! நான் இதனைப் பொய்யாகக் கூறவில்லை; தங்களிடம் பொய்பேசவும் என் உள்ளம் துணியாது"

சத்தியதபர் அவன்கூறியதை ஆழ்ந்துகேட்டுக்கொண்டிருந்தார்.

"முனிவரே! தாங்கள்தான் பொய் சொல்லாதவராயிற்றே! சொல்லுங்கள், நான்போட்ட பாணத்தின் குறிகளோடு இந்தப்பக்க மாகப் பன்றி ஏதேனும் வந்ததா?"

வேடன் பலமுறை கேட்டான்; அவரோ சிந்தனைச்சுழலில் சிக்கிக்கிடந்தார்.

சத்தியதபருக்கு இப்போது சத்தியசோதனை!

" பன்றி வந்தது ; இந்தப்புதரில் இருக்கிறது " - என்று சொன்ஞல் பன்றி அழிந்துவிடும் ; உண்மை அழியாது ! பன்றியைக்கொன்று வேடனுக்கு உதவிசெய்ததாகும்.

— இப்படி ஒரு சிந்தனை.

" பன்றி இந்தப்பக்கம் வரவில்லை " என்று சொன்ஞல் உண்மை அழிந்துவிடும் ; பன்றி பிழைத்துவிடும் ; வேடன் குடும்பமோ பட்டினியால்வாடும்.

— இப்படியும் ஒரு சிந்தனை.

சிந்தனையின் ஊடே தேவி பீஜாட்சரத்தை உச்சரித்தார் சத்தியதபர்.

" உடலை மதிக்கின்ற வேடனே !
எவன் காண்கிருனே அவன் பேசுவதில்லை !
எவன் பேசுகிருனே அவன் காண்பதில்லை ! "

— ஒரு சுலோகமாகப் பிறந்தது.

வேடன் தன்னை மறந்தான் ; தவமுனிவரது கருத்துக்களை அசைபோட்டவாறு அவன் நல்லவழிநோக்கி நடந்துகொண்டே சென்ருன்.

பன்றியைக் கண்ட கண் பேசாது ; உண்மையைச் சொல்லும் வாய் பன்றியைப் பார்க்கவில்லை !

காண்பது கண் ; அதற்குப் பேசும் ஆற்றல் இல்லை ! சொல்லை ஒலிக்காது.

பேசுவது வாய் ; அதற்குக் காணும் ஆற்றல் இல்லை ! பொருளைக் காணுது.

உண்மை ! உண்மையைத்தான் கூறிஞர் சத்தியதபர். " கண்டவர் விண்டிலர் ; விண்டவர் கண்டிலர் " என்பதும் இதனுல்தானே !

---

## EXTRACT FROM THE VISITORS' BOOK

### Dharmapuram Adhinam

### Sri Vaithianathaswami Devasthanam, Vaithiswarankoil

I had a very convenient and peaceful darsan of Lord Vaithianathawamy and Goddess Thailambal I am glad to certify that this is one of the best and well maintained temples. I have had the good fortune to visit.

S. Padmanaban,

1—10—78, Judge, High Court of Madras.

# செய்திகள்

## துலாமகோத்ஸவம்

தருமையாதீனத்திற்குச் சொந்தமான மாயூரம் வள்ளலார்கோயில் அருள்மிகு ஞானம்பிகை உடனுகிய அருள்மிகு வதான்யேசுவர சுவாமி திருக்கோயிலில் 7—11—78 முதல் துலாமகோத்ஸவம் சிறப்பாக நடைபெற்றது. 13—11—78 திங்கட்கிழமை திருக்கல்யாணத் திருநாளன்று ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள் எழுந்தருளி வழிபாடாற்றி அன்பர்களுக்கு அருட்பிரசாதம் வழங்கியருளினுர்கள். 16—11—78 கடைமுக தீர்த்தத்தில் பஞ்சமூர்த்திகளும் தீர்த்தம் கொடுத்தருள அன்பர்கள் நீராடி இறையருள்பெற்றனர்.

## கார்த்திகை ஞாயிறு தீர்த்த விழா

தருமையாதீனத்திற்குச் சொந்தமான கருங்குயில்நாதன்பேட்டை அருள்மிகு ஆனந்தவல்லி உடனுகிய அருள்மிகு சக்திபுரீசுவரசுவாமி கார்த்திகை ஞாயிறுதோறும் அம்மையுடன் தருமபுரத்தின் காவிரி வடபால் எழுந்தருளித் தீர்த்தங்கொடுத்தருளினுர். மாயூரத்தைச் சுற்றியுள்ள கிராம மக்கள் பலர் இவ்விழாவில் கலந்துகொண்டு தீர்த்த நீராடி இறையருள் பெற்றனர்.

## ஆயில்யத்திருநாள் ஆலய வழிபாடு

தருமையாதீனம் இருபத்தாருவது குருமகாசந்நிதானம் அவர்களின் இம்மாத ஜன்ம நட்சத்திரமாகிய ஆயில்யத்திருநாள் வழிபாடு 21—11—78 மாலை திருப்பட்டீச்சரம் அருள்மிகு தேனுபுரீசுவரர் திருக்கோயிலிலும், 22—11—78 காலை திருச்சத்திமுற்றம் அருள்மிகு சிவக்கொழுந்தீசர் திருக்கோயிலிலும் விசேஷ அபிஷேக ஆராதனைகளுடன் சிறப்பாக நடைபெற்றது. திருப்பட்டீச்சரத்தில் குடந்தைச் சிவனடியார் திருக்கூட்டத் தலைவர் திரு. எஸ். சுந்தரேசன் செட்டியார் பி. ஏ., எல். டி. அவர்கள் தலைமையிலும், திருச்சத்திமுற்றத்தில் சுந்தரப்பெருமாள்கோயில் வித்துவான். திரு. மா. சிவகுருநாத பிள்ளை அவர்கள் தலைமையிலும் தருமையாதீனப் பல்கலைக்கல்லூரிப் பேராசிரியர்கள், நிறைநிலைமாணவர்கள், கருகாவூர் தொண்டர். திரு. கோ. சிவஞானம், சுந்தரப்பெருமாள்கோயில் திரு. சு. சுவாமிநாத தேசிகர் ஆகியோர் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்திஞர்கள். ஆராதனையின்போது அவ்வத் தலத்திருப்பதிகங்களை ஓதச்செய்து அச்சிட்ட தலப்பதிக வெளியீடும் அன்பர்களுக்கு வழங்கப்பட்டது.




## ஜோதிஷம் திரு. A. இராசமாணிக்கம்

ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நடுநிலைப்பள்ளி, திருப்பனந்தாள்.

### காளயுக்திஞூ மார்கழிமீ 1உ முதல் 29உ முடிய.

### ( 16—12—78 முதல் 13—1—79 முடிய )

காளயுக்திஞூ மார்கழிமீ 1உ ஸ்திரவாரம் திருவாதிரை நக்ஷத்திரம் தைதுலைகரணம் கூடிய காலத்தில் சூரிய உதயம் முதல் 5 விஞடிக்கு, தனுர் லக்கினத்தில் ஸ்ரீலோகரட்சகரான சூரியபகவான் தேவதின பிராதகாலத்திய தனுர்மாத பூஜா தொடக்கத்திற்கு அனுக்கிரகித்து விருச்சிக ராசியிலிருந்து தனுர் ராசி சங்கிரமணமாக மார்கழி மாதப் பிரவேசம் செய்கின்ருர். அன்று ஷடசீதி புண்ணியகாலமாகும். தானியாதிபதி சனிபகவான் ஆகிருர். அதன் பலஞவது உலகில் கறுத்தநிறமுள்ள உளுந்து எள்போன்ற புன்செய்தானியங்கள் அதிகம் விளைந்துவரும். கரிசல்பூமியில் விளைச்சல் மிகுந்து தொழில்களுக்கான கச்சாப்பொருள்கள் விருத்தியாகிவரும். நாடுகளில் ஆலைத் தொழில்கள் முன்னேற்றமாக நடக்கும்.

லோகசுபிட்சத்திற்காக ஆன்ருேர்கள் தர்மசீலர்களின் முயற்சியில் நற்கிரியைகள் பல நடைபெற்றுவரும். தேசங்களில் தேசத் தலைவர்களால் நீதி பரிபாலனம் நடைபெற்று சகலபிரஜைகளும் நலமடைவர்.

உலகிலுள்ள திருமடங்கள் ஆசாரியபீடங்களில் தெய்வத்திருத்தோற்றமாக விளங்குகின்ற சிவஞானகுருமகான்கள் சிஷ்யகோடிகளுக்கு ஞானவுபதேசம் செய்தருளுகின்ற மேன்மையினுல் சிஷ்யகோடிகள் சிவஞான வித்துகளாகப் பரிமளித்து லோகத்தில்சிவாசாரம் பரப்பிவருவார்கள். தேசங்களில் எங்கும் தேவாலயங்களில் உஷக்கால பூசை, நித்தியகால பூசைகள், உற்சவங்கள் சிறப்பாக நடைபெற்றுவரும். வேதமந்திரங்கள், தேவார இன்னிசை பாராயணங்கள், சிவனடியார்களின் இறையன்பு சொற்பொழிவுகள் ஆங்காங்கு தேவாலயங்களில் நடைபெறும். சகலபிரஜைகளுக்கும் இறைவன் சிந்தனை ஏற்படும். பக்தகோடிகள் பக்திநெறியில் இறைவனை வழிபட்டு மன அமைதியாக நல்வாழ்க்கை நடத்துவார்கள்.

## பிராதக்கால சிறப்பு

குறிப்பு :— ஒரு மானிடவருஷம் தேவர்களுக்கு ஒருதினம். உத்தராயணம் தேவர்களுக்கு பகற்காலம். தட்சிணுயணம் இரவுக் காலம். இந்தத்தேவதினம் அண்டநாயகனுக்கும் நக்ஷத்திரங்களுக்கும் ஒருசுவாசகாலம். இவ்விதமாகும் அண்டநாயகனின் 21600 சுவாசம் அல்லது மானிடவருஷங்கள் அண்டநாயகனுக்கு ஒருதினம். இதன் 200 மடங்குகாலம் ஒரு மகாயுகம் ஆகும். ஒரு மகாயுகவருஷம் 43,20000 மும், கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் முறையே 4, 3, 2, 1 என்ற வீதத்தில் ஆகும். இப்படியாகிற மகா யுகங்கள் 1000 திரும்பினுல் ஒரு கற்பம் முடியும். இப்படியாகும் காலக்கிரமத்தில் தேவர்கள் ஒருதினத்தில் சிவபெருமானுக்கு உஷக் கால பூசை செய்யும் காலம் மார்கழிமாதம் ஆகிறது. இந்த மார்கழி மாதம் பூராவும் எல்லோரும் காலையில் $4\frac{1}{2}$ மணிக்குமுன்னதாகத் துயி லெழுந்து ஸ்நானுதி நித்யநியமங்கள் முடித்து தூய்மையுடன் சிவா லயம் சென்று உஷக்காலத்தில் சிவநாம ஸ்தோத்திரத்துடன் சிவ பெருமானை வழிபடுதலினின்றும் இறைவன் அருட்கடாட்சம்ஏற்படும். தெய்வானுக்கிரகம் மேலிட்டு வாழ்க்கையில் சகல நன்மைகளும் ஏற்படும்.

### 1. மேஷம் :- அசுவதி - பரணி – கார்த்திகை $\frac{1}{4}$

( சு. சே. சோ. ல. - லி. லு. லே. லோ. - அ. )

மேஷராசி 9 பாதங்களும் சுபபலன்தரும். தனுதிசௌகரியங்கள் மேலாக இருந்துவரும் சகோதரருக்கு இராசகாரியங்களில் அவசர நிலைமையாக இருந்துவரும். இயந்திரவாகன பிராப்தியில் 15உ அளவில் நல்ல நிலைமை ஏற்படும். புத்திரர் புத்திரிகளின் நலம் சாதாரணமாகஇருந்துவரும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் முன்னேற்றம் காணும். கிரியாமேன்மையும், சகல காரியங்களிலும் ஜெயப்பிராப்தியும் ஆகும். தாம்பத்திய வாழ்வில் சுமுகம் நிலவும். மார்கழிமாதம் 11உ 38 நாழிகை 26 விஞடி முதல் 13உ 48 நாழிகை 59 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

### 2, ரிஷபம் :- கார்த்திகை $\frac{3}{4}$ - உரோகிணி – மிருகசீர்ஷம் $\frac{1}{2}$

( இ. ஊ. ஏ. - ஒ. வ. வி. வு - வே. வோ. )

ரிஷபராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் போதிய அளவுக்கு வந்துசேரும். 17உ க்குமேல் வித்வத்துவம் கலைத்துறையில் இராஜாங்கநன்மைகள் ஏற்படும். சகோதரர்கள் பிரபல ஸ்திதியில் இருந்துவருவர். மனை விக்குச் சாதாரணமாக இருக்கும் மயக்க நலிவு போன்றவை நீங்கும். புத்திரனுக்கு இராசாங்கத்தில் உயர் அந்தஸ்தளிக்கும். மார்கழிமாதம்

13உ 48 நாழிகை 58 விஞடி முதல் 15உ 56 நாழிகை வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**3. மிதுனம் :- மிருகசீர்ஷம் $\frac{1}{2}$ - திருவாதிரை – புனர்பூசம் $\frac{3}{4}$**

**( கா. கி. - கு. க. ங. ச்சா. - கே. கோ. ஹ. )**

மிதுனராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். குடும்பத்தில் பணவருமானங்கள் அந்தஸ்து மேன்மைக்கு ஏற்ப வந்துகொண்டிருக்கும். சகோதரர் நலம் சாதாரணமாக இருந்துவரும். வித்துவத்துவத்தில் நன்மதிப்பு ஏற்படும். மாதமுடிவில் எழுத்துமூலகாரியங்களில் நன்மையை ஏற்படுத்தித்தரும். வீடு வாகனங்களில் நல்ல சௌகரியங்களை அளித்துவரும். பெண்மகவு ஒன்று ஏற்படும். மனைவிக்குச் சாதாரணமாக உள்ள சிரோபாதை போன்ற நலிவு நீங்கும். மார்கழிமாதம் 15உ 56 நாழிகை முதல் 18உ 1 நாழிகை 54 விஞடி வரையில் சந்திராஷ்டமம். புதன் வியாழன் சுபமாகும்.

**4. கடகம் :- புனர்பூசம் $\frac{1}{4}$ – பூசம் – ஆயில்யம்.**

**( ஹி. - ஹு. ஹே. ஹோ. ட. - டி. டு. டே. டோ. )**

கடகராசி 9 பாதங்களும் சுபமான பலனைத்தரும். குடும்பாபிவிருத்தியில் பண வருமானங்கள் கெடியாக வரவாகிக்கொண்டிருக்கும். சகோதரருக்கு 17உ அளவில் இராசாங்கத்தில் நன்மைகள் ஏற்படும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் விசேஷ பலனைத்தரும். எழுத்துமூல விஷயங்களில் துரிதநடைமுறையும் நன்மையும் ஏற்படுவதாகும். விவகாரத்தில் ஜெயம் ஏற்படும். வாகனப்பிராப்தி திருப்தியளிக்கும். தாரபுத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். மார்கழிமாதம் 18உ 1 நாழிகை 54 விஞடி முதல் 20உ 8 நாழிகை 51 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வெள்ளி சனி சுபமாகும்.

**5. சிம்மம் :- மகம் - பூரம் – உத்திரம் $\frac{1}{4}$**

**( ம. மி. மு. மே. - மோ. ட. டி. டு. - டே. )**

சிம்மராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். மாத முதலில் தன லாபங்கள் திருப்திகரமாக வந்துகொண்டிருக்கும். பிற்பகுதியில் எழுத்துமூல காரியங்களில் நிர்ப்பந்தம் ஏற்படும் சகோதரர் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். வீடு வாகனப் பிராப்தியில் நல்ல நிலைமையாக இருந்துவரும். வயிற்றில் அஜீர்ணம் ஏற்பட்டுக் குணமாகும். ஞாயிற்றுக்கிழமை சூரியார்ச்சனை செய்ய நலம்தரும். ஜீவனேபாயத்தில் நன்மைகள் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். மார்கழி மாதம் 20உ 8-நாழிகை 51 விஞடி முதல் 22உ 18 நாழிகை 51 விஞடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**6. கன்னி :- உத்திரம் $\frac{3}{4}$ - ஹஸ்தம் - சித்திரை $\frac{1}{2}$**

**( டோ. ப. பி. - பு. ஷ. ண. ட. - பே. போ. )**

கன்னியாராசி 9 பாதங்களும் சுமார் பலனுக நடந்துவரும். குடும்பாபிவிருத்தியில் தனுதி சௌகரியங்கள் நல்ல நிலைமையாக இருந்துவரும். சகோதரர் நலம் நன்ருக இருந்துவரும். வீடு வாகனப் பிராப்தியில் ஓர் கலவரம் வந்து சரிபடும். புத்திரர்களின் கல்வி கலை கலைகளில் பெரும் செலவை உண்டுபண்ணும். 17உ அளவில் ஜீவனேபாயத்தில் நன்மைகளை உண்டுபண்ணும். மேலிடத்தில் கௌரவ நிலைமையை ஏற்படுத்தும். மார்கழிமீ 22உ 18 நாழிகை 51 விஞடிமுதல் 24உ 34 நாழிகை 7 விஞடிவரை சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபமாகும்.

**7. துலாம் :- சித்திரை $\frac{1}{2}$ – சுவாதி – விசாகம் $\frac{3}{4}$**

**( ர. ரி. - ரு. ரே. ரோ. தா. - தி. து. தோ. )**

துலா ராசி 9 பாதங்களும் சுப பலன் தரும். குடும்பாபிவிருத்தியில் தன லாபங்கள் திருப்திகரமாக வந்துகொண்டிருக்கும். வாக்கு கௌரவம் மேலிடும். எல்லாக்காரியங்களும் மனேதைரியத்திஞல் வெற்றிகரமாக நடந்துகொண்டிருக்கும். பூமி இயந்திரங்களில் இலாப கரமாக இருந்துவரும். புத்திரர் சௌக்கியம் தார சௌக்கியம் நன்ருக இருந்துவரும். ஓர் புனித ஸ்தலம் சென்று வருதல் ஆகும். மார்கழிமீ 24உ 34 நாழிகை 9 விஞடி முதல் 26உ 55 நாழிகை 27 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்.

**8. விருச்சிகம் :- விசாகம் $\frac{1}{4}$ - அனுஷம் – கேட்டை.**

**( தோ. - ந. நி. நு. நே. - நோ. ய. யி. யு. )**

விருச்சிக ராசி 9 பாதங்களும் மிச்சிரபலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் மதிப்பாக வந்துகொண்டிருக்கும். தர்ம செலவுகள் மனைவிவழி கௌரவச் செலவுகள் ஏற்படுவதாகும். சகோதர சௌக்கியம் நன்ருக இருந்துவரும். இருப்பிட சௌகரியம் குறைந்து காணும். வெளியில் அடிக்கடி பயணங்களை ஏற்படுத்தும். தார புத்திரர்களின் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். வியாஜ்ஜிய வழக்குகளில் ஜெயம் ஏற்படும். மார்கழிமீ 26உ 59 நாழிகை 27 விஞடி முதல் 29உ 22 நாழிகை 11 விஞடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**9. தனுசு :- மூலம் – பூராடம் – உத்திராடம் $\frac{1}{4}$**

**(யே. யோ. பா. பி. - பு. த. ப. ட. - பே.)**

தனுர்ராசி 9 பாதங்களும் மிச்சிர பலனுக நடக்கும். குடும்பாபி விருத்தியில் பண வருமானங்கள் சீராக வரவாகிவரும். சகோதரர்

நலம் சாதாரணமாக இருந்துவரும். மாத முதலில் சகல விஷயங்களி லும் நன்மை ஏற்படும். மாதப் பின்பகுதியில் சமூகத்தினரிடையே ஓர் மனத்தாங்கல் ஏற்படும். வீடு வாகன சௌகரியம் மாதாவின் சௌகரியம் நன்ருக இருந்துவரும். அடிக்கடி வெளியூர் பயணம் ஏற்படும். ஞாயிற்றுக்கிழமை சூரியார்ச்சனை செய்ய நலம் தரும். மார்கழி 2உ 4 நாழிகை 15 விஞடி முதல் 4உ 33 நாழிகை 28 விஞடி வரையில் சந்திராஷ்டமம். செவ்வாய் புதன் சுபமாகும்.

**10. மகரம் :- உத்திராடம் $\frac{3}{4}$ – திருவோணம் –அவிட்டம் $\frac{1}{2}$**

(போ. ஜ. ஜி. - கி. கு. கே. கோ. - கா. கி.)

மகரராசி 9 பாதங்களும் மிச்சிரபலஞக நடக்கும். குடும்பாபி விருத்தியில் நல்லவிதத்தில் தனவருமானங்கள் வந்துசேரும். சகோ தரர் பிதா இவர்களின் நலனில் செலவுகளும் ஏற்படும். வித்துவத் துவம் கலைத்துறையில் நற்பலன் ஏற்பட்டுக்கொண்டிருக்கும். புத்திரன் அல்லது புத்திரிகளுக்கு நூதனவஸ்துவின் பிராப்தியைத்தரும், அவர் களால் மகிழ்ச்சிநிலவும். தாம்பத்தியவாழ்க்கை தெய்வபக்தி மேலிட்டு நடந்துவரும். ஜீவனேபாயத்தில் நன்மைகள் ஏற்பட்டுக்கொண் டிருக்கும். மார்கழிமாதம் 4உ 33 நாழிகை 28 விஞடி முதல் 7உ 0-36 விஞடி வரையில் சந்திராஷ்டமம். ஞாயிறு திங்கள் சுபமாகும்.

**11. கும்பம் :- அவிட்டம் $\frac{1}{2}$ – சதயம் - பூரட்டாதி $\frac{3}{4}$**

(கு, கே. - கோ. ஸ. ஸி. ஸு. - ஸே. ஸோ. தா.)

கும்பராசி 9 பாதங்களும் சுபபலன்தரும். குடும்பாபிவிருத்தியில் பலவிதத்தில் பணவருமானங்கள் வந்துசேரும். சகோதரர் சகோதரி களுக்கு மிகுந்த நன்மைகளை ஏற்படுத்திவரும். பூர்வசொத்தினின் றும் நற்பலன் வந்துசேரும். வீடுவாகனங்களின் சௌகரியங்கள் நன்ருக இருந்துவரும். புத்திரர் சௌக்கியம் தாரசௌக்கியம் நன்ருக இருந்துவரும். செய்தொழிலில் கீர்த்தி ஏற்படும். மார்கழிமாதம் 7உ 0-36 விஞடி முதல் 9உ 22 நாழிகை 34 விஞடி வரையில் சந்திராஷ் டமம். செவ்வாய் புதன் சுபமாகும்.

**12. மீனம் :- பூரட்டாதி $\frac{1}{4}$ – உத்திரட்டாதி – ரேவதி.**

(தி. - து. ஸ. ச. த. - தே. தோ. ச. சி.)

மீனராசி 9 பாதங்களும் சுபபலன்தரும். குடும்பாபிவிருத்தியில் பணவருமானங்கள் கெடியான நிலைமையில் வரவாகிக்கொண்டிருக்கும். சகோதரர்கள் சௌக்கியம் நன்ருக இருந்துவரும். வாகன பிராப்தி திருப்தியளிக்கும். புத்திரனுக்கு மேன்மைஸ்திதி ஏற்படும். வித்தியா வியாபாராதி கலைத்துறைகளில் 17உ முதல் நற்பலன் வந்துகொண் டிருக்கும். மனைவியின் ஆரோக்கியம் நன்ருக இருந்துவரும். மார்கழி மாதம் 9உ 22 நாழிகை 34 விஞடி முதல் 11உ 38 நாழிகை 26 விஞடி வரையில் சந்திராஷ்டமம். வியாழன் வெள்ளி சுபமாகும்,

( அட்டை பின்பக்கத் தொடர்ச்சி )

14உ 29—12—78 வெள்ளி சீகாழி ஸ்ரீ பிரமபுரீசுவரர் ஸ்ரீ திருநிலைநாயகி. திருமுல்லைவாயில் ஸ்ரீ முல்லைவனநாதர் ஸ்ரீ அணிகொண்ட கோதை.

15உ 30—12—78 சனி குறுக்கை ஸ்ரீ வீரட்டேசுவரர் ஸ்ரீ ஞானம்பிகை. தலைஞாயிறு ஸ்ரீ குற்றம்பொறுத்தீசுவரர் ஸ்ரீ கோல்வளைநாயகி.

16உ 31—12—78 ஞாயிறு காலை திருநெடுங்களம் ஸ்ரீநித்தியசுந்தரர் ஸ்ரீ ஒப்பிலா நாயகி. மதியம் உய்யக்கொண்டான் ஸ்ரீ உஜ்ஜீவனநாதர் ஸ்ரீ அஞ்சனாக்ஷி. மாலை திருச்சிராப்பள்ளி ஸ்ரீ தாயுமானே சுவரர் ஸ்ரீ மட்டுவார்குழலி.

17உ 1—1—79 திங்கள் மதுரை ஸ்ரீ சுந்தரேசுவரர் ஸ்ரீ மீனாட்சியம்மை.

18உ 2—1—79 செவ்வாய் வேளூர் ஸ்ரீ வைத்தியநாதசுவாமி ஸ்ரீதையல்நாயகி.

19உ 3—1—79 புதன் திருவாவடுதுறை ஸ்ரீ மாசிலாமணீசுவரர் - ஸ்ரீ ஒப்பிலாமுலையம்மை.
பேரளம் ஸ்ரீ சுயம்புநாதர் ஸ்ரீ பவானியம்பாள்.

20உ 4—1—79 வியாழன் திருவாரூர் ஸ்ரீவன்மீகநாதர் ஸ்ரீ அல்லியங்கோதை.

21உ 5—1—79 வெள்ளி திருக்கோளிலி ஸ்ரீ பிரமபுரீசுவரர் ஸ்ரீ வண்டமர் பூங்குழலாள்.

22உ 6—1—79 சனி மாயூரம் ஸ்ரீ காசிவிசுவநாதர் ஸ்ரீ விசாலாக்ஷி.

23உ 7—1—79 ஞாயிறு குத்தாலம் ஸ்ரீ சொன்னவாறறிவார் ஸ்ரீஅரும்பன்ன-வனமுலையாள்.

24உ 8—1—79 திங்கள் திருப்பறியலூர் ஸ்ரீவீரட்டேசுவரர் ஸ்ரீஇளங்கொம்பனை யாள். குமாரகோயில், மேலைப்பாதி.

25உ 9—1—79 செவ்வாய் வேளூர் ஸ்ரீவைத்தியநாதசுவாமி ஸ்ரீதையல்நாயகி. திருஇந்தளூர் ஸ்ரீ பரிமளரங்கநாதர்.

26உ 10—1—79 புதன் ஆச்சாள்புரம் ஸ்ரீ சிவலோகத்தியாகர் ஸ்ரீ திருவெண்ணீற்றுமை.

27உ 11—1—79 வியாழன் தருமபுரம் ஸ்ரீஞானபுரீசுவரர் ஸ்ரீஞானம்பிகை.

28உ 12—1—79 வெள்ளி சிதம்பரம் ஸ்ரீ திருமூலநாதர் ஸ்ரீ உமையம்மை. ஸ்ரீ சபாநாதர் ஸ்ரீ சிவகாமியம்மை.

29உ 13—1—79 சனி திருப்பனந்தாள் ஸ்ரீ செஞ்சடையப்பர் ஸ்ரீ பெரியநாயகி. திருச்சேய்ஞலூர் ஸ்ரீ சத்தகிரீசுவரர் ஸ்ரீ சகிதேவி. திருவாப்பாடி ஸ்ரீபாலுகந்தநாதர் ஸ்ரீ பெரியநாயகி.

தை 1 14—1—79 ஞாயிறு மாயூரம் ஸ்ரீ மாயூரநாதர் ஸ்ரீ அபயாம்பிகை. குமரக்கட்டளை ஸ்ரீ வள்ளி தேவசேனா சமேத ஸ்ரீ சுப்பிரமணியசுவாமி.



உ

குருபாதம்

தருமையாதீனம்

## ஸ்ரீலஸ்ரீ குருமகாசந்நிதானம் அவர்கள்

# மார்கழிமாத வழிபாடு செய்தருளும் தலங்கள்

---

1உ 16—12—78 சனி தருமபுரம் ஸ்ரீ தருமபுரீசுவரர் ஸ்ரீ அபயாம்பிகை.

2உ 17—12—78 ஞாயிறு கருங்குயில்நாதன்பேட்டை ஸ்ரீ சக்திபுரீசுவரர் - ஸ்ரீ ஆனந்தவல்லி.
மணக்குடி ஸ்ரீ சுந்தரேசுவரர் ஸ்ரீ ஞானாம்பிகை.

3உ 18—12—78 திங்கள் காலை திருவலஞ்சுழி ஸ்ரீகபர்த்தீசுவரர் ஸ்ரீ பெரியநாயகி.
மதியம் திருவையாறு ஸ்ரீபஞ்சநதீசுவரர் ஸ்ரீ அறம்வளர்த்தநாயகி.
மாலை சுவாமிமலை ஸ்ரீ சுவாமிநாத சுவாமி.

4உ 19—12—78 செவ்வாய் வேளூர் ஸ்ரீவைத்தியநாதசுவாமி ஸ்ரீதையல்நாயகி.
திருப்புன்கூர் ஸ்ரீ சிவலோகநாதர் ஸ்ரீ சொக்கநாயகி.

5உ 20—12—78 புதன் மாயூரம் ஸ்ரீ மாயூரநாதர் ஸ்ரீ அபயாம்பிகை
குமரக்கட்டளை ஸ்ரீ வள்ளிதேவசேனா சமேத ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி.

6உ 21—12—78 வியாழன் வள்ளலார் கோயில் ஸ்ரீ வதான்யேசுவரர் - ஸ்ரீ ஞானாம்பிகை.

7உ 22—12—78 வெள்ளி திருக்கடவூர். ஸ்ரீ அமிர்தகடேசுவரர் ஸ்ரீ அபிராமி.

8உ 23—12—78 சனி திருநள்ளாறு ஸ்ரீ தர்ப்பாரண்யேசுவரர் ஸ்ரீ போகமார்த்த பூண்முலையாள். காரைக்கால் - தருமபுரம் ஸ்ரீ யாழ்மூரிநாதர். ஸ்ரீ மதுரமின்னம்மை.

9உ 24—12—78 ஞாயிறு சூரியனார்கோயில் ஸ்ரீ சூரியன் முதலாய் நவக்கிரகங்கள்.
திருபுவனம் ஸ்ரீ கம்பகரேசுவரர் ஸ்ரீ தர்மசம்வர்த்தனி.

10உ 25—12—78 திங்கள் திருவிடைமருதூர் ஸ்ரீ மகாலிங்கசுவாமி ஸ்ரீ நன்முலைநாயகி. ஆலங்குடி ஸ்ரீ காசியாரண்யர் ஸ்ரீ உமையம்மை.

11உ 26—12—78 செவ்வாய் வேளூர் ஸ்ரீ வைத்தியநாதர், ஸ்ரீ தையல்நாயகி.
திருநின்றியூர் ஸ்ரீ லக்ஷ்மிபுரீசுவரர் ஸ்ரீ உலகநாயகி

12உ 27—12—78 புதன் விளநகர் ஸ்ரீதுறைகாட்டும்வள்ளலார் ஸ்ரீகாம்பனதோளி.

13உ 28—12—78 வியாழன் மாயூரம் வள்ளலார்கோயில் ஸ்ரீ வதான்யேசுவரர் - ஸ்ரீஞானாம்பிகை. நீடூர் ஸ்ரீசோமநாதர் ஸ்ரீவேயுறுதோளியம்மை.